3

# GNANAVARMAN




BY


A. N. KANNIAH,

(Tamil Pandit, St Gabriel's High School, Madras.)



K. MUNUSWAMY NAIDU & CO.,

PUBLISHERS & BOOK-SELLERS,

286, Esplanade, Madras.


 1930. [Price As. 8.

# ஞானவர்மன்






சென்னை

(அர்ச். காபிரியேல் உயர்தரப் பாடசாலை)

தமிழ்ப் பண்டிதர்

ஆ. நா. கன்னையா

எழுதியது

பிரசுரகர்த்தர்

K. முனுசாமி நாயுடு கம்பெனி,

புத்தக வியாபாரிகள்

286, அப்பா பில்டிங்க்ஸ் எஸ்பிளனேட்

சென்னை

1930

[விலை அணா 8

## நான்முகம்

மக்களை உயர்வு பெறச் செய்வதற்குக் கல்வியே கருவியாகும். இது எல்லாப் பொருளினும் ஏற்றமுடையது. உலகோர் உண்மையான பொருளையே தம் மக்களுக்குத் தேடித் தரல் நலம்.

கல்வியின் மூலமாக மாந்தரின் அறிவைப் பெருக்குவதில் முக்கியமான சில விஷயங்களை நோக்க வேண்டும். இளமையிலேயே மக்களுக்கு மனத்தைச் செம்மையாக்கும் நூல்களைத் தந்து படிப்பித்தல் வேண்டும். அதனால் உண்டாகும் பயன் அளவிட் முடியாதது. மனத்திற்கும், அறிவிற்கும், சந்தேகத்தையும், குழப்பத்தையும், தரும் பொய்ப் புராணக் கதைகளை எழுதுவதிலும், புனைந்துரையான நூல்களின் மூலமாக மக்களுக்கு அறிவை ஊட்டும் நீதிகளைத் தருவது சாலச் சிறந்ததாகும் என்பது சீரிய அறிஞர்களி மேலான நோக்கம்.

மேல் பெரியார்களின் நோக்கங் கொண்டே யான் இச்சிறு நூலினை எழுதலானேன். இது பல நீதிகளையும் ஊககம், பக்தி முதலியவைகளையும் துர்குணமுடையார் அடையும் பலன்களையும் விளக்கிச் செல் செல்லுகின்றது. இதனை மக்கள் பாடமாகக் கொண்டு கற்கப் புகின் அறிவும், ஒழுக்கமும் அடைவார் என்பது முதியோர் நோக்கம். இந்நூலின்கண் பிழைகள் காணின் உலகம் பொறுக்க.

அன்பன்,

**ஆ. நா. க.**

# பொருளடக்கம்



# ஞானவர்மன்

## முதல் அத்தியாயம்

### மதுவால் இழிந்த மைந்தர்

ஒரு நாள் மாலைப்பொழுது மேகங்களால் சூழப்பட்டு ஆகாயம் வெகு விநோதமாக இருந்தது. மேல் திசையில் அழுந்திக் கொண்டிருந்த சூரியனுடைய தோற்றம் பார்த்தவர்களைப் பரமானந்த மடையச் செய்தது. அதன் கதிரொளிகள் கோபுரங்களின் உச்சியிலும், நீண்டுயர்ந்த தென்னை முதலிய மரங்களின் தலைகளிலும், மஞ்சள் நிறமாகத் தோன்றி, மெல்ல மறைந்து கொண்டிருந்தன. காற்று சில்லென்று வீசிக் கொண்டிருந்தது. விடாமல் இங்கும் அங்கும் நீர்த் துளிகள் ஆகாயத்திலிருந்து விழுந்துகொண் டிருந்தன. மேய்ச்சலுக்காக வெளிச் சென்றிருந்த ஆடு மாடுகள் வீடுகள் நோக்கி வந்து சேர்ந்துகொண் டிருந்தன. அவற்றுள், பசுக்கள் தம் கன்றுகளை நினைத்துக்கொண்டு வெகு விரைவாகக் கதறிக்கொண்டும், நாற்கால் பாய்ச் சலாய் ஓடிக்கொண்டும் தெருக்களில் ஆரவாரத்தை

உண்டாக்கின. செல்லும் வழியில் காரணமின்றி ஒன்றையொன்று எதிர்த்துக், கொம்புகளால் முட்டித் தள்ளிக்கொண்டு, சில கொழுத்த எருதுகள் அந்த ஊரையே பயமுறுத்திக்கொண்டு சென்றன.

பெண்கள் வீடுகள் தோறும் விளக்கேற்றித் தெருக்களை அலங்கரிப்பாராயினர். விளக்குகள் ஏற்றிய சிறிது நேரத்தில் சில வீடுகளில் பெண்கள் பாடிக் கொண்டிருந்தார்கள். சில வீட்டுப் பெண்கள் வாத்தியங்கள் வாசித்துக்கொண் டிருந்தனர். ஆண்மக்களிற் சிலர், சிறு சிறு கூட்டமாகத் திண்ணைகளில் அமர்ந்து, ஆங்காங்குப் பேசிக்கொண் டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் ஆகாயத்தில் மேகங்கள் மெல்ல நகர்ந்து, ஒழுக்கமுடைய மாதர் வழியில் பிறரைக்கண்டால் சற்று தூரம் விலகி நடப்பது போல், இடைவெளியுண்டாக்கிப் பலபகுதிகளாகப் பிரிந்து சென்றன. அந்த இடைவெளிகளின் வழியே சந்திரவொளி ஆங்காங்கு நிலத்திற் படிந்தது. தோட்டங்களிலும், தனிமரங்களின் கீழும் பலவிதமான சித்திரங்களால் விளங்கிய நீலப் போர்வை நிலத்தைக் கவிந்தாப்போல் நிழலின் தோற்றம் தோன்றிற்று.

இரவு எட்டுமணி இருக்கும். உணவு கொண்டவர்கள் பலர் வெளியில் உலவிக்கொண்டிருந்தார்கள். சிறு பிள்ளைகள் நிலவில் பலவித விளையாட்டுகளில் மகிழ்ந்து ஆடிக்கொண்டிருந்தார்கள். சிலர் உணவு முடிக்காமல் பல பல காரியங்களைப் பற்றிப் பேசிக்

கொண்டிருந்தார்கள். சிலர் பகலெல்லாம் உடலுழைத்துப் பட்ட துன்பந்தீர உண்டி முடித்து உறங்குவாராயினர்.

பாலொடு பழங்களைப் பரிந்து உண்டு வாழும் சில பணக்காரர்களுக்குப் பலவித எண்ணங்களால் விரைவில் தூக்கம் வருகிறதில்லை யல்லவா? மக்கள், வாழ்க்கையில் கிடைத்தவரையில் திருப்தியடைந்து, உண்டு, உடுத்தி, உறங்கி, மனம் துன்பப்படாமல் வாழ்வது நல்லதா? அறுசுவையுண்டும், ஆயிரம் தேடியும், நாளும் நாளும் நலம்பெற முடியாது மனம் துன்புற்றுப் பலபல நினைந்து பாழ்படல் நலமா? எவ்வகை சிறந்தது எண்ணிப் பாருங்கள்! மனவமைதி இல்லாத பணக்காரர்களே இரவில் தூக்கமில்லாமல் பாழ்படுகின்றார்கள். அவர்களே அக்காலங்களில் வேறு சில துஷ்டவேலைகளிலும் பழகிவிடுகின்றார்கள். அவர்கள் நாள் செல்லச் செல்லத் தாமும் கெட்டுப், பிறரையும் கெடுக்க வழி தேடுகிறார்கள். ஐயோ! அப்படிப் பட்டவர்கள் முடிவில் ஒரு காசுக்கும் உதவாக் கயவர்களாகிப், பலரும் நகைக்க அவமதிப்புக்கொண்டு அழுது சாகின்றார்கள்.

மேற்கூறிய விஷயங்கள் நடந்த நகரத்திற்கு மாளவம் என்று பெயர். அந்த நகரத்தின்கண் அரண்மனை ஒன்று உண்டு. அதில் பல கூடங்களும், மேடைகளும், மண்டபங்களும், அறைகளும் நிறைந்து இருந்தன. அரண்மனையின் வடப்பக்கத்தில் இருந்த ஒரு பெரிய கூடத்தில் பல ஆதனங்கள் அலங்கரிக்கப் பெற்றிருந்

தன. சிறந்த இரண்டு ஆதனங்களில் இரண்டு அரச குமாரர்கள் உட்கார்ந்துகொண்டு இருந்தார்கள். அவர்களைச் சுற்றினுப்போல் பலர் பல ஆதனங்களில் அமர்ந்து இருந்தார்கள். அவர்கள் யாவரும் குடித்துக் களித்து இருந்தார்கள் என்பதை அவர்களுடைய கண்கள் நன்கு விளக்கின. அக்கூட்டத்தின் இடையில் சில பெண்கள் நடன மாடிக்கொண் டிருந்தார்கள். அந்தப் பெண்களின் ஆடல்,பாடல்களைக் கண்டுங் கேட்டும் அரச குமாரர்கள் களிப்புற்றிருந்தனர். தலைவனுக்குத் தகுந்த துணைவரும்,வேலைக்காரர்களுமே அங்கு இருந்தவர்கள் ஆதலால், அவர்களும் மதுவின் மயக்கத்தால் மதிமயங்கிக் கண்டவாறு பிதற்றிக்கொண்டும், நடன மாதர்களைப் போல் தாம் ஆடவும் தொடங்கினுர்கள்.

திடீரென்று நடனம் ஒய்ந்தது. ஏனெனில் மூன்று வேலைக்காரர்கள் ஒரு பெண்பிள்ளையின் கைகளைக் கட்டி இழுத்துக்கொண்டு வந்து அங்கு அரச குமாரர்கள் முன் தள்ளினுர்கள். அந்தப்பெண் துக்கத்துடன் தரையில் குப்புற விழுந்து கிடந்தாள். மாணவர்களே! அந்தப் பெண் ஏன் அங்கு கொண்டுவரப்பட்டாள்? அவள் ஏதாவது குற்றம் செய்து இருப்பாள்; அதனுல் அவளை அவ்விடத்துக்கு இழுத்துக்கொண்டு வந்தார்கள் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா? அப்படி அவள் ஒரு குற்றமும் செய்தவளல்லள். அங்கிருந்தவர்களைப் பற்றியும், அந்தப் பெண்ணைப் பற்றியும் சில விஷயங்கள் சொல்லுகிறேன் கேளுங்கள்.

மாளவம் என்பது அந்த நகரத்தின் பெயர் என்று உங்களுக்கு முன்னமே தெரியும் அல்லவா? அந்த நகரத்தில் தேவவர்மன் என்ற அரசன் ஒருவன் வாழ்ந்திருந்தான். அவன் ஏறக்குறைய நல்ல குணம் படைத்தவன் என்றே சொல்லலாம். ஏனெனில் நல்லார்போல்லார்தமை மக்களால் அறியலாகும் என்ற பெரியோர்களின் மொழிகளைக்கொண்டு நோக்குமிடத்துப் பின் கூறப்போகும் அவனுடைய இருபிள்ளைகளின் குணங்களைக் கேட்டு, நீங்கள் "இப்படிப்பட்ட பிள்ளைகளைப் பெற்றவனும் ஒரு மதிகேடனாகத்தானே இருக்கவேண்டும்" என்று நினைப்பீர். அந்தச் சந்தேகத்தை நீக்கிக்கொள்ளவே அரசனை அவ்வாறு பொதுவாகக் கூற நேர்ந்தது.

தேவவர்மனுக்கு மூன்று குமாரர்கள் உண்டு. அவர்கள் மூவரும் ஒருமனிதனிடத்துப் பொருந்தியுள்ள சத்துவம் இராஜசம், தாமசம், என்னும் மூன்று குணங்களே போல் விளங்கினர். முதல் குமாரன் பெயர் இராஜவர்மன் என்பது. அவன் மிகவும் குரூரமான குணமுடையவன். எவற்றையும் பாழ்ப்படுத்துவதே அவனுடைய இயல்பு ஆதலால், அவனைத் தாமசகுணத்திற்கு ஒப்பிடலாம். இரண்டாம் மகன் பெயர் மந்தவர்மன் என்பது. அவன் மதியீனன்; எந்தக் காரியத்திலும் வெகு திடமாகவே இருப்பான். அவன் பொறுமைக்கும் கழுதையின் பொறுமைக்கும் எவ்வித வித்தியாசமும் இராது. அவன் செய்யும் காரியங்களெல்லாம் வளர்ந்

துகொண்டே யிருக்குமே ஒழிய முடிவுக்கு வருவ தில்லை. அதனால் அவனை இராஜஸ குணத்திற்கு ஒரு வாறு ஒப்பிடலாம். மூன்றும் மகனான இளையவன், ஞானவர்மன் எனப் பெயர் பூண்டவன். பெயருக்குத் தகுந்தவாறு அவனிடத்தில் உத்தமகுணங்கள் மிகுந்து வளர்ந்தன. பிறருக்குத் தீங்கு என்பதை அவன் கன விலும் நினையாதவனாக இருந்தான். அரசகுலத்தில் பிறந்த மகன் அவனே என்பது அவனுடைய உத்தம குணங்கள் விளக்கின. அதனால் அவனைச் சத்துவ குணத்திற்குச் சமானமானவன் என்று கூறத் தடை யொன்றுங் கிடையாது.

தேவவர்மனின் முதல் இரண்டு மக்களே அந்தக் கூடத்தில் உயர்ந்த ஆதனங்களில் அமர்ந்திருந்தவர் கள். அவர்கள் எப்போதும் கள், காமம், சூது, கொலை, பொய், இவைகளுக்குத் துணைவர்களாகி வாழ்கிறவர் கள். பஞ்ச மஹாபாதகம் அவர்கள் நெஞ்சைவிட்டு நீங்கிய நிமிஷம் அவர்கள் பிறந்தநாள் முதல் எப்போ தும் கிடையாது, மூர்க்கரை மூர்க்கர் முகப்பது முழு வதும் உண்மை என்பது, அவர்களுடைய தோழர்க ளாலேயே உலகத்தில் சிறந்து விளங்கியது என்று உறுதி யாகச் சொல்லலாம். செல்வமும் சிறிது சேர்ந்துவிடின் துஷ்டர்களின் வேலைகளுக்குச் சொல்லவும் வேண் டுமோ! அதிலும் அதிகாரமும் துணை செய்யுமானல் மற்றும் வேண்டியது என்ன? அப்படிச் சிறந்த தன் மைகள் நிறையப் பெற்றவர்களே அந்த அரச குமாரர்

கள். அவர்கள் தங்கள் நகரிலுள்ள ஆண்களையும், பெண் களையும் கண்ட கண்டவாறு இரவும் பகலும் துன்புறுத் துவதே வேலை. அவ்வாறே அன்று இரவும் அவர்கள் செய்யத்தொடங்கினார்கள். அவர்களுக்குத் துணையா னவர்களே சிலர் நகரத்துக் குடிகளில் அனாதையான பெண் ஒருத்தியை அங்குக் கட்டி இழுத்துக்கொண்டு வந்தார்கள். அவளோர் ஏழைக் குடியிற் பிறந்தவள். நற்குண மிகுந்தவள்; தாய் தந்தையை இழந்தவள். துக் கத்தால் வீட்டில் அமர்ந்து அழுதுகொண்டிருந்த அந்தப் பெண்ணைக் குடிமயக்கத்தால் அந்த வேலைக்கா ரர்கள் அப்படிச் செய்து அரசகுமாரர்களின் மகிழ் வைக்கண்டு தாமும் மகிழ எண்ணினார்கள்.

இராஜவர்மனும், மந்தவர்மனும் தங்கள் முன்னால் தள்ளப்பட்ட பெண்ணைக் கண்டு சிரித்தார்கள். கட்குடி யர்களுக்கு முன்பின் முரணாகப் பேசுவது இயல்பு அல் லவா? இராஜவர்மன் தன்தம்பியை நோக்கி "மந்த வர்மா! இவள் கிடக்கும் கோலத்தைப் பார்த்தாயா?" என்றான். மந்தவர்மன் ஒன்றும் மொழிய முடியாமல் எழுந்து நின்றான். அடுத்த நிமிஷமே குட்டிக்கரணம் போட்டுக்கொண்டு கீழே விழுந்து விட்டான். மறுபடி யும் அவன் முயற்சி செய்துகொண்டு எழுந்து தன் சகோதரன் தோளைப் பற்றிக்கொண்டு நின்றான். அவன் கைகளும், கால்களும், கண்களும், மதிமயக்கத்தை விளக்கி நின்றன. இராஜவர்மன் வீர புருஷன்போல நின்றுகொண்டு அந்தப் பெண்பிள்ளையைக் கீழ்வரு

மாறு வினவினன்.

இரா:—பெண்ணே நீயார்?

பெண்:—அரசரே! யான் இந்த நகரில் வாழும் ஒரு ஏழைப்பெண்

இரா:—உன்னுடைய பெயர் என்ன?

பெண்:—என் பெயர் குணமணி என்பது.

இரா:—பேஷ் நன்றாயிருக்கிறது. குணமணியா உன்பெயர். குணமணிதான் நீ—, சரி—எதோ ஒரு பாட்டு பாடு பார்க்கலாம்.

குணமணி:—அரசே எனக்கு ஒன்றும் பாடத்தெரியாது, அதற்காக என்னை மன்னிக்க வேண்டும்.

இரா:—உனக்குப் பாடத் தெரியாவிட்டால் ஒரு ஆட்டம் ஆடு கேட்கலாம்.

குணமணி:—மன்னரே! யான் ஆட்டம் ஆடும் குலத்தில் பிறந்தவள் அல்லள். என்னைத் தொந்தரவு செய்யாமல் விட்டுவிடுமாறு உங்களை வேண்டிக் கொள்ளுகிறேன்.

என்று அவர்கள் காலில் விழுந்து அழுதாள். அப்பொழுது மந்தவர்மன் என்பவன் குடிவெறியோடு குனிந்து, அந்தப் பெண்ணின் தலைமயிரைப் பிடித்திழுத்து மேல் தூக்கி நிறுத்திக் குளறியநாவுடன், "நாங்கள் சொல்லுவது போல் நீ நடக்கவேண்டும். நாங்கள் யார் உனக்குத் தெரிகிறதா? யார் என்று ஏமாற்றுகிறாய்! நீ ஆடிப்பாடா விட்டால் இதோ பார் உன்னை

என்ன செய்கிறேன்" என்று சொன்னான். அந்த மொழிகளைக் கேட்டுக் குணமணி ஒன்றும் மறுமொழி கூற முடியாமல் தனக்குள் "ஐயோ! தெய்வமே என்னை இப்படியும் விடலாமா! இப்பாதகர்கள் குடியர்கள் என்பதும், மனம்போனவாறு நடப்பவர்கள் என்பதும் இவர்கள் வார்த்தைகளாலும், செய்கையாலும் தெரிகிறதே. பாட்டு பாடு பார்ப்போம் என்றும், ஆட்டம் ஆடு கேட்போம் என்றும் சொன்னதை யான் இன்றே அறிந்தேன். அரச குடும்பத்தில் பிறந்தும் இவர்களுக்குக் கடவுள் நற்புத்தி யளிக்காத காரணமென்னோ! இந்தத் துஷ்டர்கள் கையில் யான் அகப்பட்டுக்கொண்டேனே! இவர்கள் என்ன செய்வார்களோ! திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை என்பரே! அப்படித் தெய்வந்தான் இச்சமயம் என்னைக் காப்பாற்ற வேண்டும். என்னாலாவது ஒன்றுமில்லை" என நினைத்துக்கொண்டு அழுதவண்ணமாக நின்றிருந்தாள்.

இராஜவர்மனும், மந்தவர்மனும் சிறிதுநேரத்தில் அவளை யணுகிப் பலவாறு வைதும், அடித்தும் துன்புறுத்தத் தொடங்கினார்கள். அப்போது குணமணி அவர்கள் கைகளிலிருந்துந் தப்பியோட முயன்றாள். அது முடியவில்லை. பின் அவர்கள் குணமணியைத் தூணில் கட்டி அடிப்பதாகப் பயமுறுத்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அவ்வாறு செய்வதைப் பார்த்து அங்கிருந்த துஷ்டத் தோழர்களும், வேலையாளர்களும் சிரித்தும், கைகொட்டியும், தலை யசைத்தும்

ஓ வென்று பேரிரைச்சலிட்டு மகிழ்ந்துகொண் டிருந் தார்கள். குணமணி பயந்து "நான் அநாதை என்னை விட்டுவிடுங்கள், நான் ஓடிப் போகிறேன். ஏழையைத் துன்புறுத்துவதால் உமக்குப் பயனென்றுமில்லை" என்று கதறினள்,

## 2-ஆம் அத்தியாயம்

### அடாது செய்யின் படாது படுவர்

தன்னை அறிந்தோ, அறியாமலோ ஒருவன் குற்றம் செய்வானாயின், அதற்குத் தகுந்தவாறு அவனுக்குக் கைமேற் கண்ட பலனாகவோ, அன்றி வியாபார நிமித்தம் ரூபாய்கள் கடன் கொடுத்தவன், நாள் பல சென்ற பிறகு கொடுத்த பணத்திற்கு வட்டியும், வட்டிக்கு வட்டியுமாகச் சேர்த்து வாங்குவது போல, பல நாள் சென்றோ தக்க தண்டனை அடைவது திண்ணமேயன்றோ! இத்தன்மை யுணராதார் சிலர் கண்டதே காட்சி, தாம் செய்வனவே சிறப்பு என நினைத்து முன் பின் பாராமல் நிகழ்த்தி விடுகின்றனர். அப்படிப்பட்டவர்கள் பின்பு அடையப் போவதை முன்பு உணர்ந்து கொள்ளும் அறிவை இழந்தவர்கள் போலும்! முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும் என்ற மொழி வீணாமோ?

அரண்மனையின் வடகிழக்குப் பகுதியில் கூடத்தைச் சேர்ந்த ஓரறையில் ஒருவன் உறங்கிக்கொண்டிருந்தான். அவன் விழித்துக்கொண்டான். சற்று நேரம் உற்றுக் கேட்டான். பெண்ணின் அழுகுரலும், பரிதாப நிலையை யுணர்த்தும் சொற்களும் அவன் காதில் பட்டன. உடனே படுக்கையை விட்டு எழுந்து, அரு

கிலிருந்த உடைவாள் ஒன்றைக் கையிலெடுத்துக் கொண்டு துயிலாடையுடன் சத்தம் வரும் வழிநோக்கி ஓடினான். விரைவில் அவன் ஒரு அறைக்குள் போய் ஆண்டிருந்த வழியாகச் சென்றான். வடபுறத்தை யடைந்து கூடத்தை நோக்கினான். அங்கு இராஜவர்ம னும், மந்தவர்மனும் நின்றுகொண் டிருப்பதையும், அவர்கள் எதிரில் ஒரு பெண் நடுங்கிக்கொண்டு அழுத வண்ணம் நிற்பதையும், அவர்களைச் சேர்ந்த பல அரண் மனை வேலைக்காரர்களையும் கண்டான்.

இராஜவர்மன் அப்பெண் பிள்ளையின் கைகள் இரண்டையும் பிடித்துப் பின்புறமாகத் திருப்பத் தொடங்கினான். அது கண்டவுடன் வாளோடு வந்த புருஷன் திடீரென இராஜவர்மன் முன் பாய்ந்து, அப் பெண்ணைத் துன்பத்தி னின்றும் தப்புவித்து நின்றான். அவ்வாறு நின்றவனைக் கண்டு அங்கிருந்தவர்கள் யாவ ரும் அவன்மேற் பாய்ந்து பிடித்துக் கொண்டனர். ஆயினும் அவ்விட புருடன் ஒரு விநாடியில் அவர்கள் பிடியினின்றும் வெளிவந்து நின்று, தன் வாளை மேல் தூக்கிப் பிடித்தான். அச்சமயத்தில் குணமணி ஓடி ஒரு புறமாக நின்றாள். இராஜவர்மனும், மந்தவர் மனும் மதுமயக்கத்தி னின்றும் சிறிது தெளிந்தவர்க ளாய்த் தந்தம் வாளைக் கையிற் பிடித்து அவனுடன் போராடத் தொடங்கினர். அஃதுணர்ந்த வேலைக் காரர்களும் ஒருங்குகூடி மலையத் தலைப்பட்டனர். தூக் கத்திலிருந்து விழித்தவன் தனி நின்று தடுக்க, மற்ற

வர்கள் யாவரும் அவனை எதிர்த்துக் கத்திகளைக் கையாடினார்கள். ஆங்கிருந்தவர்களில் தனித்தவன் இளைஞனாயினும், சிறிது நேரத்திற்குள் தன்னொடு எதிர்த்த வேலைக்காரர்களை அடித்து வீழ்த்தி, அரச குமாரர்களையும் உதைத்துத் தள்ளினான். தனி வீரன் பொருத நேர்மையைக் கண்டு நின்ற குணமணி அழுகை நீங்கிக், கடவுளே நம்மைக் காக்க இவ்வுருக் கொண்டு இங்கு வந்தாரோ என்று, மனமிக மகிழ்ந்து அவ்வீரனைப் பார்த்தவண்ண மிருந்தாள்.

அடிப்பட்டுக் கீழ் வீழ்ந்தவர்களில் அரச குமாரரிருவரும் எழுந்து, மறுமுறையும் அவனைத் தாக்க முன்வந்தனர். அது கண்ட வீரன் "மூடர்களே!உமக்கு எப்போதும் இதுவே தொழிலா! குலத்தைக் கெடுக்க வந்த கோடரிகளே! இனி என்னைத் தாக்க நீவிர் எதிர் வருவீராயின் உயிர் உங்களுடைய தல்ல" என்று கூறி நின்றான். அவ்வுரை கேட்ட அரசகுமாரர் "அறிவிலி! எங்கள் காரியத்தில் உன்னை யார் தலையிடச் செய்தனர்! உனக்கு எங்களை மறுக்க என்ன உரிமை" என்று வெகு கம்பீரமாகக் கேட்டனர். அவ்வுரை கேட்ட வீரன் சினமுற்று "அடி முட்டாள்களே! துஷ்டர்களைத் தண்டிப்பதே என்கடமை. எனக்கு ஒருவரும் கட்டளையிட வேண்டியதில்லை" என்று கூறிக் குணமணியைத் தன்கையிற் பிடித்துக்கொண்டு செல்ல முயன்றான். அது கண்ட மன்னர் மக்கள் சீற்றங் கொண்டு அவனைத் தடுக்க முன் வந்தனர். வாலிபன்

அவர்கள் ஒவ்வொருவரையும் கீழ்தள்ளி, அவர்கள் வாள்களைப் பிடுங்கி அப்புற மெறிந்துவிட்டு, "இனி நீர் இவ்விதக் கொடுஞ் செய்கைகளைச், செய்யத் தொடங் குவீராயின் அரசரிடம் சொல்லி உம்மைத் தகுந்தவாறு தண்டிக்கச் செய்வேன்" என்று கூறினன். அவ்வுரை கேட்டவுடன் அவர்கள் இடியோசை கேட்ட நாகம் போல் உடல் ஒடுங்கி நின்று விட்டனர்.

வீரன் குணமணியுடன் வெளியே சென்று, அவ ளைச் சிறிது தூரம் அழைத்துக்கொண்டு போய்விட்டு, "அம்மை! இனி நீ துன்பமின்றி உன் வீடுசேரலாம்" எனத் தலைவணங்கிக் கூறினன். வீரன் உரை கேட்ட குணமணி தானும் வணங்கி "என்னைக் காத்தகடவுளே! இந்தப் பேருபகாரத்திற்கு மாருக யான் யாது கைம் மாறு செய்ய வல்லவள். கைம்மாறுவேண்டாக் கடப் பாடு மாரி மாட்டேன்ஞற்றுங் கோல்லோவுலகு "என்ற முதுமொழிக் கிணங்க, புயல் போன்ற தமக்கு யான் செய்ய வல்லது ஒன்று மில்லை. ஆயினும், இன்று முதல் என் உடல் பொருள் ஆவி மூன்றையும் உந்தமக்கே உரி மையாக்கினேன்" எனக்கூறிப் பணிந்து நின்றனள்.

வீரன் குணமணியின் மொழியோர்ந்து, "பெண் பாவாய்!என் போன்ற ஆடவர் துன்புற்ருருக்குத் துணை புரிந்து காப்பதே கடனுகும். அவ்வழியின்றி இருப்பது உலகில் உதித்த மக்களுக்கு அழகல்ல. அத்தன்மை யுடையோர் மக்களு மாகார். மாக்களும் பிறவற்றிற்கு உதவி புரிகின்றன வெனில் மக்கள்செய்வது புதுமையல்

லவே. அவ்வாறிருக்க, யான் உனக்குச் செய்தது பெரிய உபகாரமாகாது. அதற்காக என்னை நீ புகழ்ந்துரைத்தல் வேண்டாம்" என்றனன். பின்னர் அப்பெண்மணி மறுமுறை பணிந்து "ஆபத்தில் ஆட்கொண்ட அண்ணலே! இன்று நீர் காப்பாற்ருவிடின் யான் இறந்து இருப்பது நிச்சயம். அவ்வாருகாமல் உயிர் வாழச் செய்த நீர் என்னை ஆட்கொண்டருளுதல் சிறப்பு உடைத்து. உம்மால் காக்கப்பட்ட உயிரும், உடலும் இனி உம்முடையனவே, இனி இச்சொல்லி னின்றும் தவறுதல் என்போன்ற மகளிருக்கு உத்தமமல்ல" எனக் கூறி, அவனை அன்புடன் ஒருமுறை நோக்கி விட்டுத் தன் வழியே நடந்துகொண்டிருந்தாள்.

வீரன் அவளுரை முழுதும் மனத்துட்கொண்டு மறுத்துக்கூற முடியாதவனுகி தேனில் விழுந்த ஈயின் தன்மையுடன் திரும்பிச் சென்று, படுக்கையில் படுத்துத் துயில்வானுயினன்.

## 3-ஆம் அத்தியாயம்

### பாதகர் செயலும் தீதிலா மகனும்

பொல்லார்க்குக் கல்விவரின் கர்வமுண்டாம்
அதனேடு பொருளும் சேர்ந்தால்
சொல்லாதுஞ் சொல்லுவிக்கும் சொற்சென்ருல்
குடிகெடுக்கத் துணிவர் கண்டாய் !
நல்லோர்க்கிம் மூன்றுபொருள் உண்டாயின்
அருளதிக ஞானம் உண்டாய்
எல்லோர்க்கும் உபகார ராயிருந்து
பரகதியை எய்து வாரே

—தனிப்பாடல்

இளமையில் நல்லவர்களோடு பழகாமல், துஷ்டப் பிள்ளைகளோடு கூடிச் சிலர் கெடுகின்ருர்கள். அப்படிப் பட்டவர்கள் வயது ஆக ஆக தீய எண்ணங்கள் மனத்துள் தங்கப் பெற்று உரம் பெற்றவர்கள் ஆகின்ருர்கள். அவர்களை நல்ல வழியில் திருப்புவதென்ருல் முயற்கொம்பாக முடிகின்றது.

நம் முன்னேர் காலங்களில் உண்மை வழிகளைக் கைப்பற்ற வேண்டி உபக் கருவிகளாகக் கொண்ட சில வழிகள் ஆண்டு பல செல்லச்செல்ல; பின் பின் தோன்றிவர்கள் முதன்மை வழியான உண்மை வழிகளை மறந்து (தெரியாமல்) உபக் கருவிகளாகக் கொண்டவைகளையே

கையாண்டு, அப்பழக்கங்களின் மூலமாகவே தனித் தனி அகஞ் செருக்குற்றவர்களாய்த் திரிகின்றார்கள். அவைகளை நீவிர் நன்கு ஆராய்ந்து உணர்ந்து உண்மையைக் கைக்கொள்ளுங்கள். பொய்மைகளை விட்டொழியுங்கள் என்று அறிஞர் கூறப் புகுவாராயின் வழிவழியாக மடத்தன்மை மேற்கொண்ட மாந்தர் அத்தகையோரைச் சீறிக், கூடுமானால் அவரை ஒறுக்கவும் நினைக்கின்றனரே! மூடத்தன்மை மேலிட்டார்களுக்கு அறிவுரைகள் யாது பயனை அளிக்கவல்லது! துஷ்டர்களுக்கு நன்மை செய்தால் ஆபத்து நேரும்'' என்ற வுரைகளை அவர்கள் ஒரு சிறிதும் பாழாக்காமல் மெய்ப்பித்து விடுகின்றார்கள். மதவாதங்களும் இத்தன்மை யுடையன வன்றோ! அறிவுள்ளோரே அகங்கொண்டு அறிவைக் கெடுத்துக்கொள்ளுகிறார்கள் என்றால், இளமை முதல் தீயன கைக்கொண்டவர்களுக்குச் சொல்லவும் வேண்டுமோ! அவர்கள் தாம் செல்வதே வழியென்று துணிவார்கள் அல்லவா?

ஞானவர்மன் குணமணியை அழைத்துக்கொண்டு வெளியே சென்றபின் அவர்களுக்குப் பின்னால் வேலையாள் ஒருவன் சென்று, அவரிருவரும் பேசிக்கொண்டன யாவும் பதுங்கிக் கேட்டுக்கொண் டிருந்து திரும்பிச்சென்று, அரச குமாரர்களிடம் அவைகளைக் கூறி முடித்தான்.

இராஜவர்மன், வேலையாளன் கூறின யாவும் கேட்டு ஒரு பக்கம் கோபம் பொங்க நின்றானாயினும், மந்த

வர்மனை அருகழைத்து "ஞானவர்மன் நாளையதினம் தந்தையிடம் யாவும் கூறிவிடுவானே! தந்தையார் நம்முடைய செயலுணர்ந்து நம்மை யாது கோபிப்பாரோ! இத்துணை நாட்கள் வெகு யோக்கியர்கள் போல் நடித்த நம்மை நாளைக்கு அவன் அவமானத்திற் குட்படுத்துவான்போல் இருக்கிறதே! இது நேராவண்ணம் யாம் என்ன செய்யலாம்" என்று கூறிக் கைகளைப் பிசைந்த வண்ணமாக முகத்தை ஒருவாறு கோணிக்கொண்டு, மூதேவியின் வாகனமே போன்று நின்றுகொண் டிருந்தான். மந்தவர்மன் சகோதரனுடைய துக்க மொழிகளைக் கேட்டுச் சற்றுநேரம் யோசித்தவண்ணமாக நின்றான். அவனுக்குச் சிறிது தூரத்தில் மற்ற வேலையாட்கள் கூடி இருந்தார்கள்.

நல்ல வழியில் மனம் செல்லவும், சீரிய தொழில் புரியவும், ஆலோசனை செய்யின் அங்கு முடிவு காண்பதற்கு ஏறக்குறையச் சில மணி நேரங்களேனும் வேண்டும். இது பெரியார் கையாண்டு அநுபவித்த முறை. கொடுந்தொழில் புரியவும், சூதும் வாதும் நாடவும், நல்லிணக்க மல்லா மக்களுக்கு அறிவு ஒரு நொடிப் பொழுதில் உண்டாவது இயல்பே யன்றோ! அவ்வாறே மந்தவர்மன் மனத்துள் ஒரு யோசனை தோன்றிற்று. உடனே அவன் தன் யோசனையினின்றும் நீங்கித் திரும்பி, இராஜவர்மனை நோக்கி "இராஜவர்மா! நீ எள்ளளவும் வருந்த வேண்டியதில்லை. யான் ஒரு சூழ்ச்சியை உணர்ந்திருக்கிறேன். அது என்ன

வென்றால் நாம் ஞானவர்மனைத் தொலைத்து விடுவதே யாகும். விடியுமுன் அவனை முடிவுசெய்து அனுப்பி விட்டால், பின் நம்மைப் பற்றித் தந்தையாரிடம் ஏதும் கூற ஒருவரும் முற்படார்கள். நம்மைக் காட்டிலும் சிறுவன்,—அவனா நமக்குப் புத்தி போதிப்பது! நானே அவனுக்குத் தகுந்த புத்தியை இன்றிரவே போதித்து, இனி யாதும் புரிய முன்வராமல் அனுப்பி விடுகிறேன்" என்று தீர மொழிகள் கூறினான்.

இராஜவர்மனானவன் அவன் மொழிகளால் சிறிது தேறினவனாகி மந்தவர்மனைப் பார்த்து "தம்பி! நீ செய்யப்போகும் சூழ்ச்சி யாது? அதை எனக்கு விளங்கச் சொல்லுவாயாக" என வெகு பரபரப்புடன் கேட்டான். அப்போது மந்தவவர்மன் மூத்தவனைப் பார்த்து "அண்ணா! இன்று ஞானவர்மன் வேட்டையாடி வந்தவன்; அவன் நம்மைத் தாக்கியபோதும் களைத்தே இருந்தான் எனத் தெரிந்தது. அவன் நல்ல தூக்கத்தில் இருக்கும் சமயம் பார்க்கவேண்டும். நாம் அவன் அறைக்குள் மாறு வேடங்கொண்டு செல்லவேண்டும். அங்கு ஞானவர்மனைக் கைகளையும், கால்களையும் இறுகப் பிணித்துத் தூக்கிக்கொண்டு வெளியேற வேண்டும். பின்னர் புரிய வேண்டுவதைக் கூறுகிறேன்" என்று கூறி நின்றான்.

இராஜவர்மன் அவன் சூழ்ச்சிக்காக வியந்து அவனைத் தட்டிக் கொடுத்தான்; அளவிலாச் சந்தோஷங் கொண்டான். "தம்பி என்றால் உன்னைப்

போன்று அல்லவோ சமயத்துக்குத் தகுந்த உபாயந் தேடி, உதவுகிறவர்களாக இருக்கவேண்டும். மற்று வீணுக்கு உடன் பிறந்திருப்பவரால் பயன் யாது?" என்று மந்தவர்மனைச் சிறிது புகழ்ந்து கொண்டான். அவ்வுரை கேட்ட மந்தவர்மனும் தனக்குள் ஆனந்த மெய்தினன். குரங்கு நின்று கூத்தாட, அக்கோலங் கண்டு அகமிக மகிழ்ந்த நாய்களைப் போல, அரச குமாரர்களிருவரும் பேசிக்கொண்ட மொழிகளையும், அவர்களின் மிகநுட்ப அறிவினையும் அருகு நின்ற ஆட்கள் கேட்டுணர்ந்து அளவிலா உவகைக் குள்ளானார்கள்.

இரவு இரண்டு மணிக்கெல்லாம் இராஜவர்மனும், மந்தவர்மனும் தம் ஆட்கள் நால்வருடன் மாறுவேடம் பூண்டு, ஞானவர்மனின் பள்ளியறைக்குள் மெல்ல நுழைந்தார்கள். அப்போது ஞானவர்மன் நன்முகத் தூங்கிக் கொண்டிருந்தான். சென்றவர்கள் அறுவருள் இராஜவர்மன் ஒரு துணியுடன் அவன் தலையருகில் நின்றான். மற்றவர்கள் ஐவரும் திடீரென்று ஞானவர்மன் மேற் பாய்ந்து அவன் சிறிதும் அசையாவண்ணம் பிடித்துக்கொண்டார்கள். உடனே இராஜவர்மன் தன் கையிலிருந்த துணியால் ஞானவர்மனுடைய வாயையும் மூக்கையும் அழுந்தப் பிணித்துவிட்டான். மற்றவர்களும் தங்கள் கைகளில் கொண்டிருந்த கயிறுகளால் அவனை உடல் முழுதும் அழுந்தக் கட்டி, ஒரு பெரிய பையில் போட்டு, அதன் வாயையும் கட்டித் தூக்கிக் கொண்டார்கள்.

தூக்கத்தில் பிடிப் பட்டவன் ஆதலால், ஞானவர்மன் அவாகள் பிணிப்பினின்றும் தப்பித்துக் கொள்ள முடியாமல்: துன்பப் பட்டுக்கொண்டே மூட்டையில் கிடந்தான். வேலையாட்கள் நால்வரும் அந்த மூட்டையைத் தூக்கிக்கொண்டு செல்ல, இராஜகுமாரர்களிருவரும் முன்னும் பின்னுமாக நடந்து சென்றார்கள். சிறிது நேரத்திற் கெல்லாம் அவர்கள் ஒரு மலையின் உச்சியை அடைந்தார்கள். அங்கு இராஜவர்மன் மந்தவர்மனைப் பார்த்து "தம்பி! இந்த மூட்டையை நாம் என்ன செய்யலாம்" என்று கேட்டான். அதற்கு அவன் "அண்ணா! இன்னமும் நீர் உணர்ந்து கொள்ளவில்லையா? இந்த மலையிலிருந்து இந்த மூட்டையைக் கீழே நழுவவிட்டால் அது பள்ளத்தாக்கை அடையுமுன் மூட்டைக்குள் இருப்பது முழுவதும் முடிவு பெற்றுவிடும். இதுதான் இந்த மூட்டைக்குக் கதி" என்றி கூறினான். பிறகு எல்லாரும் சிறிது தூரம் சென்று செங்குத்தான ஒரு இடத்திற்கு நேரே மலைமேல் நின்றார்கள். அங்கிருந்து அவர்கள் கொண்டு சென்ற மூட்டையைக் கீழே வீசி எறிந்தார்கள். சிறிது தூரம் மூட்டை செல்வத்தைக் கண்டார்கள். இனி நம்மைப் பிடித்த துன்பம் தொலைந்தது என்று உள்ளக் களிப்பெய்தி அரண்மனைக்குத் திரும்பிச் சென்று அவர்கள் படுத்து உறங்கினார்கள்.

பொழுது புலர்ந்ததும் அவரவர்கள் காரியங்களில் கண்ணுங் கருத்துமாக இருந்தார்கள். தேவவர்மன்

கொலுமுகத்தில் அமர்ந்திருந்தான். இராஜவர்மனும், மந்தவர்மனும் துயில் நீங்கிக் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு அரசனை அணுகினார்கள். அவர்களுடைய துணைவர்களும் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றார்கள். அரசனைக் காணுமுன் இராஜவர்மனும், மந்தவர்மனும், தமக்குள் ஏதோ இரகசியம் பேசிக்கொண்டார்கள். பின்னர் அரசனைக் காண நடப்பவர்களாகி அழுத கண்ணும் சிந்திய மூக்குமாகத் தேவவர்மன் முன் சென்று வீழ்ந்தனர். அரசன் தன்மக்கள் துக்கப்படுவதைக் கண்டு பரபரப்புடன் ஆதனம் விட்டிரங்கி, அவர்கள் அருகணுகித் தானும் விசனித்தவனாய்க் காரணம் வினவினான். அது கண்ட அத்துஷ்ட மைந்தர்கள் ஒருவர்க்கொருவர் சைகை செய்துகொண்டு, மேன்மேலும் துக்கங் கொண்டவர்கள்போல் நடித்தார்கள். அரசன் பின்னும் பலமுறை அவர்களை வினவத் தொடங்கினான். அதுபோது அம்மூர்க்கர்கள் அரசனைப் பார்த்து "தந்தையே நாங்கள் இனி என்ன செய்வோம்! எங்கள் துணைவனை இழந்தோமே! இனி எப்போது கண்களால் பார்க்கப் போகிறோம்" என்று ஓவென்று அலறி அழுதனர். அவர்கள் அவ்வாறு அழுவதைக் கண்டவரசன் தானும் அழுதுவிஷயத்தை விளங்கக் கூறுமாறு கேட்டான். மன்னனையும் அழச்செய்த அந்த மடையர்கள் "தந்தையே ஞானவர்மன் நேற்று வேட்டைமேற் சென்றான். அவனைக் காட்டில் வேங்கை ஒன்று எதிர்த்துக் கிழித்து விட்டதாம்.

அதனைக் கண்டவர்கள் எங்களிடம் வந்து கூறினார்கள். நாங்கள் தம்பியை இழந்தோம்" என்று தேம்பித் தேம்பி அழுதனர்.

போய்யுடை யொருவன் சொல் வன்மையினால் மெய் போலும்மே மெய் போலும்மே என்று கூறிய மொழிகளுக் கிணங்க துஷ்ட மைந்தர்களின் பொய்யான துயர மொழிகளை உண்மையென்று அரசன் எண்ணித் துக்கமுற்றான். பின்னர் ஒருவாறு தன் மக்களைத் தேற்றத் தொடங்கி "மைந்தர்களே இறந்தவர்கள் மீண்டு மெழுந்து வருவரோ ! இனி நீர் அழுவதனால் பயனென்ன ? அவனுடலைக் கொண்டு வந்தீர்களா எங்கே இருக்கிறது ஞானவர்மனின் உடல்? அதை எனக்குக் காட்டுவீர்களா," எனக் கேட்டனன். அது கேட்ட அவ்விருவரும் விழித்து, ஒருவரை யொருவர் பார்த்தனர். பிறகு வேலைக்காரர்களைப் பார்த்தனர். அந்தச் சமயத்தில் "ஞானவர்மனுடைய உடல் இதோ இருக்கிறது பாருங்கள்'' என்ற ஒலி அங்கிருந்தவர்கள் காதில் பட்டது. அரசன் அந்தவொலி வந்த திசையை நோக்கினான், பார்த்தவன் மனம் பரமானந்த மடைய அந்த நிமிஷத்தில் தனக்கு முன்னே ஞானவர்மனைக் கண்டான். அவனைக் கண்டதும் அரசன் ஓடித் தழுவிக்கொண்டான்.

அது கண்ட பாசாங்கு காட்டிய அரச குமாரர்களிருவரும் திருடர்களைப் போல் விழிக்கத் தொடங்கினர். அரசன் ஞானவர்மனைப் பாத்து நடந்த விஷ

யத்தை வினவினான். அவன் முற்றுங் கூறித் தன்னை மலையிலிருந்து கீழே வீழ்த்திய வரையில் சொல்லி முடித்தான். ஞானவர்மன் கூறியவை முற்றுங் கேட்டுத் தேவவர்மன் திடுக்கிட்டு, மனங்கொதித்து "மடையர்களே! என் அரசிலேயே கொடுமையைச் செய்யத் தொடங்கிய நீங்கள் என் முன் இனி நிற்க வேண்டாம். உங்களுக்குப் புத்தி கூறுவதனால் பயனொன்றும் பெற முடியாதென எனக்குத் தெரிகிறது. இன்றே நீர் இவ்விடம் விட்டு ஓடிப் போகவேண்டும். என்று கடிந்து கூறினான். அந்த மொழிகளைக் கேட்ட இருவரும் தலை குனிந்தவண்ணம் அவ்விடம் விட்டகன்றனர். பிறகு அரசன் ஆதனத் தமர்ந்து ஞானவர்மனை நோக்கி "மைந்தா! உன்னை அந்தத் துஷ்டர்கள் மலையிலிருந்து உருட்டினார்கள் என்று கூறினாயல்லவா? அதன் பின்னர் நீ எப்படிச் சிறிதும் புண்படாமல் தப்பித்துக் கொண்டாய்! அதை எனக்குத் தெரிவிப்பாயாக" எனக் கேட்டனன்.

தந்தை மொழிகளைக் கேட்ட ஞானவர்மன் "தந்தையே நான் மலையிலிருந்து உருட்டப் பெற்றதும் மூர்ச்சையானேன். பிறது நான் சிறிது உணர்ச்சி பெற்றுக் கண் விழித்துப் பார்த்தேன். அப்போது என் கட்டுகள் எல்லாம் அவிழ்ந்து நான் தனித்து ஒரு புல் தரையில் படுத்திருப்பதாக உணர்ந்தேன். பின் எழுந்து சுற்றிப் பார்த்தேன். அங்கு ஒருவரும் என் கண்ணுக்குப் புலப்படவில்லை. அங்கிருந்து புறப்பட்டு அங்கும்

இங்கும் அலைந்து ஒரு சிறு வழியைப் பிடித்துக் கொண்டு முடிவில் இங்கு வந்து சேர்ந்தேன். இது கடவுள் செயலே போலும்" என்று கூறி முடித்தான்.

ஞானவர்மன் மொழிந்தன வுணர்ந்த அரசனும், மற்றவர்களும் அற்புத மெய்தினர்கள், உண்மை வழியைப் பின்பற்றியவர்களே உலகம் காப்பது என்றும் உண்மை; சத்தியமே வெல்லும் என்பதும் இங்கு உணரத் தக்க தன்றோ! ஞானவர்மனின் நற்குணங்களுக்காக அவனைக் கடவுளே காப்பாற்றினர் என்றே சொல்லவேண்டும். ஆனால் எந்த வகையில் கடவுள் காப்பாற்றினர் என்று நீங்கள் அறிய விரும்புவீர்கள் அல்லவா?

பின்னால் வருவதைக் கவனித்துப் படியுங்கள்.

## 4-ஆம் அத்தியாயம்

### வழி தவரிய மங்கை

நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க
நல்லார் சொற் கேட்பதுவு நன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவு நன்று.

—ஔவையார்

குணமணி ஞானவர்மனை விட்டுப் பிரிந்து வழியே நடந்தாள் என்று முன்படித்தீர்கள் அல்லவா? அவள் ஞானவர்மனையே மனத்துள் நினைத்த வண்ண மாகக் கால் சென்ற வழியே சென்ருள். மனம் ஒன் றையே உறுதியாகச் சிந்தித்துக்கொண் டிருக்குமா ளுல் புலன்களின் செய்கைகள் அங்கு ஒன்றும் செல்லா தல்லவா! அப்படி யின்றி, ஏதாவதொரு புலன் ஒரு தொழில் மேற் சென்ற காலத்துத் திடீரென்று மனம் ஒன்றில் நிலைத்து விடுமாயினும், தான் செய்த தொழி லையே மேலும் மேலும் செய்து கொண்டிருப்பதும் புலன் களின் தொழிலாகும். இக்காரணத்தாலன்ருே ஏதா வது செயல் கொண்டிருக்கும் போதும், சிலர் கால் கரங்களை அசைத்துக் கொண்டிருப்பதும், கையிற் கிடைத்தனவற்றைக் கிள்ளிக்கொண்டிருப்பதும் வழக் கமாக வைத்துக்கொண்டு இருக்கின்ருர்கள்.

குணமணியும் மனம் ஒன்றை நினைக்கக் கால்கள்

மாத்திரம் நடந்து செல்லச் சென்றவளாதலால், வீடு செல்லும் வழியை நீங்கி அவள் வெகுதூரம் சென்று விட்டாள். அவள் அதனை உணராமலே மேன்மேலும் நடந்து கொண்டிருந்தாள். கொஞ்ச நேரத்தை அவ் வாறே அவள் நடந்து கழித்தாள், சட்டென்று குண மணி தலை நிமிர்ந்து பார்த்தாள். அவளைச் சுற்றிலும் காடும், மலையும் அடர்ந்து இருப்பதையும், அவள் ஒரு பள்ளத்தாக்கின் வழியாக நடப்பதையும் உணர்ந்தாள்.

அச்சமயம் அவள் மனத்தில் ஒருவிதமான அச் சமும் ஆச்சர்யமும் உண்டாயிற்று. "என்ன நாம் ஊரை விட்டு நடுக்காட்டிற்குள் வந்து விட்டோம். இது காண எனக்கு ஒன்றுந் தோன்றவில்லையே. மனம்போன போக்குக்கு வழி யோன்றில்லை என்பதுபோல் என் மனம் ஒன்றை நினைத்துக் கொண்டிருக்க, என் கால் கள் என்னைச் சுமந்து இங்கு கொண்டுவந்து விட்டதே" என்று தனக்குள் எண்ணிக்கொண்டு, ஊர் திரும்பிச் செல்லவேண்டி வழியை நோக்கினாள். அவளுக்கோ வந்த வழி ஒன்றும் புலனாகவில்லை. அதனால் அவள் மேல் முகமாகவே சிறிதாறு நடந்து சென்றாள்.

குணமணி நடந்து சென்ற வழியில் சிறிது தூரத் தில் ஏதோ ஓர் உருவம் அவள் கண்களுக்குப் புலப் பட்டது. அதனை அவள் நன்றாய்! உற்று நோக்கினாள். நோக்கலும் குணமணி மனம் திடுக்கிட்டு நடுங்கிப் பின் புறமாகத் திரும்பி விரைந்து செல்ல முயன்றாள். ஏனெ னில் குணமணி கண்ட காட்சியானது அவ்வாறு செய்

தது. வனத்துள் வாழும் அரக்கன் ஒருவன் அங்கு நின்றிருந்தான். அவனுடைய உடல் தடித்து எருமையின் நிறம் போல், மேல் எங்கும் மயிர் மூடியிருந்தது. அவனுடைய தலையானது பெரிய வளைந்த பல கொம்புகளையுடைய மிருகத்தின் தலையே போல், மயிர் சடை சடையாக அடர்ந்து பெருத்து இருந்தது. அவனுடைய நெற்றி மூன்றங்குல அளவு உயர முள்ளதாக நீண்டு விகாரமாயும், கண்கள் பெருத்த குழாங் கற்களில் கருப்பு நிறம் பூசப்பெற்றது போன்றும், மூக்கு நீண்டு உயர்ந்து முனையில் வளைந்தும், பற்கள் கடை வாயில் மேலும் கீழும் வளைந்தனவாகவும் தோன்றின. அவ்வளவு கோர உருவமுடையவன் கருநிற ஆடைகளையணிந்து, தலையில் சூலங்கள் செருகியது போன்ற குல்லா வொன்றையும் கொண்டிருந்தான். அப்படிப் பட்ட அவ்வரக்கன் ஒருமனிதனைப் பயமுறுத்திக் கொண்டிருந்தான். அத்தோற்றமே குணமணியின் குடல்களை நடுக்கமுறச் செய்தது.

அரக்கன் குணமணியைக் கண்டுவிட்டான். அவள் பயந்து திரும்பிச் செல்வதையுங் கண்டான். இடி இடித்தாற்போன்ற குரலுடன் "ஓ ஓ ஓடிப்போக நினைக்கிருயோ? என்னிடம் அடைந்தவர்கள் ஒருவரும் தப்ப முடியாது" என்று கத்தினன். அந்தக் கடுமொழிகளைக் காதிலேற்ற மாது பின்னும் நடுக்க மெய்திக் கால் பெயர்த்துக் கடுகிச் செல்ல முயன்ருள். அது கண்ட அரக்கன் சிரித்துத் தன் கையை அவள் பக்க

மாகநீட்டி விரல்களைத் திறந்து ஏதோ வாயினால் கூறிய வண்ணம் சட்டென்று கையை விதிர்த்தான். உடனே குணமணி எப்புறமும் செல்ல முடியாமல் மயங்கினாள். சிறிது நேரத்திற் கெல்லாம் அவள் மூர்ச்சையாகிக் கீழே விழுந்தாள். அரக்கன் அவள் விழுந்த இடத்தை யணுகி, ஏதோ கையால் சைகை செய்ய அக்கணமே அவனும், குணமணியும் அங்குக் காணப்படவில்லை.

குணமணியை அரக்கன் தன் சக்தியினால் மூர்ச்சிக்கச் செய்ததும், அவளைத் தூக்கிக்கொண்டு அவனுடை இருப்பிடத்தை அடைந்தான். அந்த அரக்கனுடைய வீடு ஒரு பெரிய அரசனுடைய அரண்மனை போல இருந்தது. அதைப் பலர் காத்துக்கொண்டு நின்றிருந்தார்கள். அரண்மனையைச் சுற்றிலும் மரங்கள் அடர்ந்த காடு மண்டியிருந்தது. காட்டைச் சூழ்ந்து மலைகளும், குன்றுகளும் நிறைந்து இருந்தன. சுருங்கக் கூறுமிடத்து அவ்வரக்கன் ஒருபெருங் காட்டிற்குள் வசித்திருந்தானென்றே கூற வேண்டும். ஏனெனில் அவன் மனை யொன்று தவிர்த்து வேறு எவ்விதமான சிறு குடிசையும் அங்கு இல்லை. அத்தகையை அரண் மனையின் உட்புறத்தே பற்பல அறைகளும், பெரியனவும், சிறியவுமான பல கூடங்களும் நிறைந்திருந்தன.

அரக்கன் குணமணியோடு அந்த அரண்மனையின்கண் காணப்பட்டான். குணமணியானவள் அந்த அரக்கனுடைய கைகளில் சாய்ந்தவளாகக் கால்களைப்

பூமியில் பதித்தவண்ணமே இருந்தாள். ஆனால் அவள் உணர்வற்றவளாகவே காணப்பட்டாள். அவளை அரக்கன் சிறிது நேரம் உற்று நோக்கியவண்ண மிருந்தான். பின்னர் அவன் தன் வலக்கரத்தால் குணமணியின் முகத்தருகில் ஏதோ சில குறிகளைக் காட்ட, உடனே அவள் மூர்ச்சை தெளிந்தவளாகிக் கண்களைத் திறக்க; அக்கணமே அரக்கன் மறைந்து விட்டான், ஆதலால் குணமணி ஒருவருமில்லாத ஒரு பெரிய வீட்டில் தனித்து நிற்பதாக உணர்ந்தாள். சுற்றி ஒரு முறை அவள் நன்ருகக் கூர்ந்து நோக்கினுள். பின்பு அவள் ஒன்றுந் தோன்றப் பெருதவளாகி நின்று "திக்கற்றவரைக் காக்கும் தெய்வமே! எண்ணுவார் எண்ணங்களி லெல்லாம் எவ்வுருவமும் கொண்டு நிற்கும் பரமே! யான் அனுதை யென்று அறிந்தும், என்னை மேன் மேலும் இடுக்கண்களிற் புகுத்துதல் நீதியாகுமா! இங்கு ஏனே தனித்த ஒ ரரணியத்தினுள் என்னை விடுத்தாய்! இந்த மாளிகையில் என்னை யாவர் கொணர்ந்து விட்டனரோ. அறியேனே! யான் வழியிற் கண்ட, ஆ! அதனை நினைக்கும்போதே என் இருதயம் நடுங்குகிறதே! அந்த உருவமே என்னை இங்குக் கொண்டுவந்ததோ! அப்படியாயின் கடவுளே! யான் இன்றே உயிர் மாய வேண்டுகிறேன். கோர அவ்வுருவத்தினின்றும் யான் மீள்வது எங்ஙனம்" என்று வாயில் வந்தவாறு முன்பின் ஆராயாது அரற்றினுள்.

குணமணியின் தீங்குரலினல் அழும் துக்க ஒசை

யைக் கேட்டதும் அவள் அருகே முற்றத் துறந்த முனிவர் ஒருவர் தோன்றி நின்று "மகளே அழவேண்டாம். உனக்கு இனி யாதொரு குறையும் இல்லை நீ உன் மனத்தில் அடைந்துள்ள திகிலை விட்டுவிடு" என்று சாந்தமான மொழிகளால் கூறினர். முனிவரைக் கண்டு அவர் உரைகளைக் கேட்ட குணமணி அவர் பாதங்களில் பணிந்து 'தபோநிதி! என்னைக் காப்பாற்ற வேண்டும்! காப்பாற்றவேண்டும்!' என்று கூறி, வழி தப்பியதிலிருந்து, அவ்விடத்தைக் கண்டது முதல் எடுத்துக் கூறினள். குணமணியின் சொற்களைக் கேட்டு அம் முனிவர் சிறிது நகைத்து "மகளே! இங்கு அரக்கன் ஒருவனும் வரமுடியாது. அன்றியும், அரக்கர் என்றும் அவர்கள் மக்களைத் தின்றுவிடுவார் என்றும் கூறுகிற வார்த்தைகளை இனி நீ நம்பாதே. அழகாய் இருப்பவர்கள் தேவர்கள் என்றும், கருப்பாயும், பல முள்ளவர்களாகவும் சரீரக் கட்டு உடையவர்களாகவும், மீசை, தலைநிறைய மயிர், தாடி இவைகளுடன் வாழ்கின்றவர்களை அரக்கர்கள் என்றும் சில மூடர்கள் சொல்வது வழக்கம். அது வாழையடி வாழையாக உலகில் வழங்கி வந்த மொழிகள். அல்லாமல் உண்மையில் அரக்கர் என்ற வகுப்பார் ஒருவரும் இல்லை. மற்றும் கூறுகிறேன் கேள்.

நாடுகளில் வசிப்பவர்களில் சிலர் நிழலிலேயே வசித்தும், பாதங்கள் தரையில் படாமல் காப்பாற்றியும் அடிக்கடி முகத்தை அழகு செய்துகொள்வதற்காக

அங்கு முளைக்கும் மயிர்களை நீக்கிப் பெண்களைப்போல் இருந்துகொண்டும், உடலெங்கும் நன்ருய் மூடியும் இருக்கிருர்கள். அவர்கள் அற்பவேலை செய்தாலும் ஒரு பெரிய கடலைக் கடந்து வந்தது போல் அபிநயிப் பது வழக்கம். உண்மையில் அவர்கள் எல்லாம் பிறர் வேலை செய்ய, அதன் பயனுய் விளைவனவற்றை ஏமாற் றித் தின்று திரியும் மனிதர்களே யாவர்; அப்படிப் பட் டவர்கள் தம்மைத்தேவர்கள் என்று நினைத்துக்கொள் ளுவதுண்டு.

பலர் நாள் தோறும் உடல் வேர்க்க உழைக்கிருர் கள். வெய்யிலும் மழையும் அவர்களுக்கு ஒன்றே, கடினமான வேலைகளை அப்படிப் பட்டவர்கள் செய்கி ருர்கள். அவர்கள் பரோபகார சிந்தை உடையவர் களாகவே இருப்பார்கள். அதனுல் அவர்கள் எப்போ தும் தம்மைத் தாமே அழகு செய்து கொள்வதும், பிறரை உழைக்க விட்டு, அவர் பலனை எதிர்ப்பார்த்துக் கூடுமானுல் வஞ்சித்து, வந்த காசுக்கு வட்டியில்லை என்று பிடுங்கித் தின்கிற வழக்கமும் அவர்களிடத்தில் கிடையாது. முரட்டு வேலைகளைச் செய்கின்றவர்கள் ஆதலால், அவர்கள் சிறிது முரடர்களாகவே தோற்று வார்கள். கருப்பு நிறமுள்ளவனை முரடன் புத்தியீனன் அநாகரிகன் என்பது சில மூடர்கொள்கை. ஆனுல் அந்த மூடக்கொள்கையர் இடையில் ஒருவர் இருவர் கருப்பு நிறமுடையவராய்ப் பிறந்து விட்டால், அவர் களை அந்த மூடர்கள் புகழ்வது கணக்கிலடங்காது.

ஆதலால் மகளே! அரக்கர் என்ற ஒரு சாதி இல்லை. இனி அந்தக் கொள்கையை மறந்துவிடு, குழந்தாய்! மக்களில் சிலர் பல நாள் பழகிய பழக்கத்தினால், பல அரிய காரியங்களைச் செய்வார்கள். அவற்றுள் ஆகாயத்தின் வழியாகச் செல்வதும், மறைந்து வசித்தலும், உடலைப் பயங்கரமாகக் தோற்று வித்தலும், உடலை இலேசாக்கிக் கொள்ளலும், தூரத்திலுள்ள விஷயங்களை இருந்தவிடத்தி லிருந்தே அறிந்துகொள்ளலும், அதேமாதிரி தூரத்தி லிருப்பவர்களைச் சமீபத்தில் காண்பதுபோல் கண்டுகொள்வதும், பிற பலவும் சேர்ந்தன ஆகும்.

மேல் கூறிய காரியங்களை மனிதன் ஒருவன் தன் உடல் வலிமையினால் அவனே செய்ய முடியும். அன்றி வலிவற்றவர்கள் உபக் கருவிகளைத் துணைகொண்டு அந்தத் தொழில்களை நடத்த முடியும். அப்படிக் காரியங்களை நடத்துவதற்குச் சித்து என்றும், அதனைக் கையாள்கின்றவர்களைச் சித்தர்கள் என்றும், அவைகளைக் கையாளாமல் அடங்கி, மனம் விசாரியாமல் இருக்கப் பழகினவர்களை யோகிகள் என்றும், முனிவர்கள் என்றும், ஞானிகள், என்றும் கூறுவது வழக்கம். மேற்கூறிய தொழில்களில் யானும் பழகி இருக்கிறேன். அவைகளில் சிலவற்றை என் மாணவர்களுக்கு இன்று செய்து காட்டினேன். அத்தருணமே நீ வழியில் வந்தாய். அதே தொழில் முறையில் உன்னை நான் இங்குக் கொண்டுவந்து விட்டேன், நீ கண்ட உருவம் நான்

அணிந்திருந்த சில வேஷப்பொருள்களே. அவைகள் ஒரு அறையில் இருக்கின்றன; அவைகளை நீ பார்க்கலாம். இந்த அரண்மனை வாயிலில் இருப்பவர்கள் என் மாணுக்கர்கள் ஆதலால், நீ பயத்தை விடு" என்று குணமணியைத் தேற்றி, உள்ளே அழைத்துச் சென்று யாவற்றையும் காட்டினுர்.

முனிவர் மொழிகள் யாவும் கேட்ட அவள் தெளிந்து, பயம் நீங்கினவளாகித் தன்னுடைய வரலாறு முழுமையும் அவரிடம் கூறி, முடிவில் அரசகுமாரன் ஞானவர்மனிடம் கூறிவந்த விஷயங்களையும் கூறினுள். அது பொழுது முனிவர்,— மாணவர்களே! அவர் பெயரை நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும் அல்லவா! அவர் பெயர் யோகானந்தர் என்பது. அவர் குணமணியின் கருத்தைத் தெரிந்துகொண்டு சிறிது நேரம் கண்களை மூடியவண்ண மிருந்தார். பின்னர் சட்டெனக் கண்களைத் திறந்து "மகளே! நாம் அருகிலுள்ள மலையடிவாரம் போய்வருவோம்" என்று புறப்பட்டார். குணமணியும் உடன்செல்ல, இருவரும் சிறிது நேரத்தில் ஒரு மலையின் அடிவாரத்தை அடைந்தார்கள்.

குணமணி மலை அடிவாரத்தை அடைந்து, மேல் நோக்கிப் பார்த்தாள். மேலே யிருந்து ஒரு மூட்டையானது கீழ் நோக்கி வந்து கொண்டிருந்தது. அதன் வாய் அடிப்புறமாகத் திரும்பி வந்ததனுல் அதன் கட்டு அவிழ, அதனுள்ளிருந்த மனிதனும் கட்

டுகள் அவிழ்ந்தவனுகி, ஆனுல் கைக்கட்டு மாத்திரம் அவிழாமல், கோணியின் வாய்க்கையிறும் அவன் கைக்கயிறும் பிணிக்கப்பட்டு, புகைக்கூட்டின் வழியாகக் கீழே இறங்கும் ஒருவனைப்போல் வந்து தரையை அடைந்தான். அவன் மூர்ச்சையாகி இருந்தான்.

அவன் தரையை அடையுமுன் முனிவரும், குணமணியும் அவனைத் தாங்கிக் கீழே படுக்க வைத்தார்கள், குணமணி அவனை நோக்கினுள். அவனே ஞானவர்மன் என்பதை அவள் உணர்ந்தாள்; விசனித்தாள். அது கண்ட முனிவர் "மகளே! நீ துக்கப்படாதே, அவன் இப்போது எழுந்து வீட்டுக்குச் செல்வான். அவன் எழுமுன் நாம் நம்மிடம் அடைவோம்" என்று கூறி, முனிவர் ஞானவர்மன் மீது ஏதோ ஒரு இலையைப் பிழிந்து தடவி விட்டு, முன்போல் குணமணியுடன் அவர் இடத்தை அடைந்து, அங்கு குணமணியை நோக்கி, 'மகளே நீஇன்று முதல் இங்கேயே தங்கியிரு' என்று கூறி, அங்ஙனமே இருத்திக்கொண்டார். திக்கற்ற அக்குணமணியும் அன்று முதல் முனிவரிடமே வசித்து வந்தாள்.

## 5-ஆம் அத்தியாயம்

### கேடுமதி கண்ணுக்குத் தோன்ருது

தூம்பினிற் புதைத்த கல்லும்
    துகளன்றிச் சுடர் கொடாது
பாம்புக்குப் பால்வார்த் தென்றும்
    பழகினும் நன்மை தாரா
வேம்புக்குத் தேன் வார்த்தாலும்
    வேப்பிலை கசப்பு மாரு
தாம்பல நூல்கற் ருலும்
    துற்சனர் தக்கோ ராகார்

—விவேக சிந்தாமணி

துற்குணமே உருவென உதித்த மாந்தர்களுக்கு எவ்வளவு உபதேசங்களைச் செய்தாலும் அவற்ருல் பலனுண்டாகாது. அப்பியாசம் கூசா வித்தை என்பது ஆன்ருேர் மொழியன்றே? சிறு நாள் தொடங்கிப் பழகியவைகளே ஒருவனுக்குத் தோன்ருத் துணையாய் நிற்குமே யல்லாது: இடை நாளில் வருவன எவையும் அவனுக்குப் பலன் தராது. எத்துணைபேர் இளமையிலேயே கள்ளும், காமமும் கைக்கொண்டு அவைகளினின்றும் நீங்காமல், அவைகளையே முக்தி மோக்ஷம் என்று கருதி வாழுகின்ருர்கள். அன்னவர்களை நல்வழியில் திருப்ப எவரேனும் முன் வருவார்களானல், அவர்கள் துன்பத்திற்குள்ளாக

வேண்டியே முடிகின்றது. இது கருதியே,

குணமிலாத் துஷ்டமிரு கங்களையு நயகுணங்
கொண்டெப்ப படுத்தி விடலாம்
கொடியபல விஷநோய்க ளியாவையு மௌஷதமது
கொடுத்துத்தி ருப்பிவிடலாம்
உணர்விலாப் பிரம்மரா க்ஷஸமுதற் பேய்களையு
முகந்துகூத் தாட்டிவிட்டலாம்
உபாயத்தி ஞற்பெரும் பறவைக்கு நற்புத்தி
யுண்டாக்கலா முயர்பெறப்
பிணமதை யெழுப்பலா மக்கினி சுடாமற்
பெரும்புன லெனச்செய்யலாம்
பிணியையு மகற்றலாங் காலதூ துவரையும்
பின்புவரு கென்று சொலலாம்
மணலையுங் கயிருத் திரிக்கலாங் கயவர்குண
மட்டுந்தி ருப்பவசமோ !

—குருபாத தாசர்

என்று பெரியார் உரைத்து வைத்தனர். அறியாமையினின்றும் நீங்கி, அறிவை யடைந்து மக்கள் முன்னேற்றம் அடைய வேண்டுமென்று முன்னோர் பல வழிகளைக் காட்டி, அவ்வழிகளைப் பின்பற்றி ஒழுகுமாறு செய்து வைத்துச் சென்றனர். அவ்வாறு மக்களை முன்னேற்ற மடையச் செய்வித்த பேரறிஞர்கள் சொல்ல வொண்ணுத துக்கங்களில் அகப்பட்டு வருந்தினர்கள் எனத் தெரிகிறது அல்லவா? முதலில் நாகரிகம் இல்லாதவர்களை நல்வழிப் படுத்த ஒரு சிலர் முன் வந்ததும், தம் மனப் பான்மையை அவர்களுக்குப் போதித்து, அவ்வழி படரச் செய்தார். அதன் பின்னர்

அறிவடைந்த மக்கள் எல்லா வழிகளும் கடவுளை அறிவதே என்பதை உணர்ந்திருக்கிறார்களா? என் வழி சிறந்தது, உன் வழி தாழ்ந்தது என்றல்லவோ. போராடத் தொடங்குகின்றனர். அத்தன்மை அவர்கள் முன் முன் கைப்பற்றிய வழியின் திறனால் விளைந்தனவன்றோ? மேன்மேலும் சிறந்த வழிகளைப் பின்பற்ற வழி காட்டுவோர்களே மேல் கூறிய பகுதியாளர்கள்: அவர்கள் தம் பழைய பஞ்சாங்கத்தையே விரித்துக்கொண்டு குலைப்பார்கள் என்றால், கெடு வழி நாடிய மதியிழிந்த மக்களுக்குச் சொல்லவும் வேண்டுமோ!

இராஜவர்மனும், மந்தவர்மனும் அரசன் சபையை நீங்கிச் சென்றார்கள் அல்லவா? அவர்கள் தம் இருப்பிடத்தை அடைந்தார்கள். அவர்களைச் சேர்ந்த வேலையாளர்களும் அவர்களைப் பின் பற்றிச் சென்றார்கள். இராஜவர்மன் கண்கள் சிவந்து இருந்தன. அவனுடைய மீசை துடித்துக்கொண் டிருந்தது, அவனுள்ளம் அனலில் பட்ட நெய் போலக் கொதிக்கத் தொடங்கிற்று. வாயினின்றும் சொற்கள் வெளி வருவதற்குப் பதிலாகச் சீற்றத்தோடு கூடிய பெரு மூச்சே நாசியினின்றும் தோன்றிக்கொண் டிருந்தது. அத் தன்மையாகப் பத்து நிமிஷங்கள் கழிந்தன.

இராஜவர்மன் தன் சகோதரனை நோக்கி "மந்தவர்மா? நாமொன்று நினைக்கத் தெய்வம் தானொன்று நினைத்து நம்மைக் கெடுத்ததே! ஒழிந்தான் என்று இருந்தோமே, அந்தச் சிறு பயல் எவ்விதமோ தப்பித்

துக் கொண்டானே! அன்றியும், நம்மை ஊரை விட்டுத் துரத்தவும் கருவியாக வல்லவோ அவன் ஏற்பட்டிருக்கிறான். அரசர் நம்மைச் சிறிதும் பாராமல், மக்கள் என்றும் நினையாமல் ஊரை விட்டு நீங்கச் சொல்லிவிட்டார் அல்லவா ? இந்தக் கிழவரா நம்மை ஓடிப்போகச் சொல்லுவது! அவரை யல்லவோ நாம் ஓட்டிவிடவேண்டும். பிள்ளைகள் வயது வந்த காலத்து அரசாட்சியைக் கைக்கொண்டு நம் கண்களுக்கு முன் அழகாக ஆட்சி புரியட்டும் என்ற எண்ணம் அக்கிழவரசருக்குக் கொஞ்சமும் இல்லையே, இனியும் அவரே ஆட்சி புரிய வேண்டும் என்றும், நாம் அவர் கீழ்ச் சிறு பையன்களைப்போல அடங்கி இருக்க வேண்டும் என்றும் நினைத்துக்கொண் டிருக்கின்றார் போலும்? கொட்டினால் தேள், கொட்டா விட்டால் பிள்ளைப்பூச்சியா ? இனி நாம் கிழவர் வழியைப் பின்பற்றுதல் கூடாது. இன்றே அதற்குத் தகுந்த யோசனை செய்யவேண்டும். எப்படியாவது அவருடைய ஆதனத்தில் நான் அமர்ந்து ஆட்சி புரிய முயற்சி செய்யவேண்டும். இன்னும் இரண்டு நாட்களுக்குள் அரசைக் கைப்பற்றும் வழியைக் கண்டுபிடிக்க வேண்டும். இவ்விஷயங்களில் உன் கருத்தென்ன ?" என்று வெகு படபடத்தச் சொற்களால் வினவினான்.

ஊர் கொளுத்தும் அரசனுக்கு ஊதிக் கொடுக்கும் மந்திரி போலவும், கட்டிக் கொண்டுவா என்றால் வெட்டிக்கொண்டு வரும் வேலைக்காரன் போலவும்

துணையாக நின்ற மந்தவர்மன் மூத்தவனுடைய மொழிகளைக் கேட்டு, அவனும் சில மொழிகளை அண்ணனுக்கு ஓதத்தொடங்கி, "அண்ணு! நம் தந்தை பேருசைக்காரர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. நல்லெண்ணமுள்ள அரசர்கள் 'எப்போது இந்தப் பூமியைக் காக்கும் தொல்லை நம்மை விட்டு ஒழியும்' என்று இருப்பார்கள். அவர்களுக்கு வயது வந்த பிள்ளைகள் இருந்தால் அவர்கள் வசத்தில் அரசை ஒப்புவித்து விட்டுத் தாம் தனித்து வாழ வழி தேடுவார்கள். அந்தக் காலம் நம் தந்தைக்குக் குறுகியும், இன்னமும் அரசைத் தானே கொண்டு ஆனந்தமா யிருக்க எண்ணுவது என்ன குணமாகும்! ஆதலால், நாம் இனி சும்மா இராமல் அரசைக் கைக்கொள்ளும் வழியைத் தேட வேண்டியது முக்கியமே.

நாம் துஷ்டர்கள் என்றும், மடையர்கள் என்றும் சபையில் தூஷித்து, நம்மை ஓடியும் போகச் சொன்ன சமயத்தில் அரசாட்சியைத் தாரும், நாங்கள் ஆட் கொள்ளுகிறோம் என்று கேட்டால் அவர் கொடுப்பாரா ! அன்றியும் நகரத்தவர்களும், சபையாரும் சம் மதிப்பார்களா ! நாம் அவரிடம் சென்று கேட்டால் அது மயிலே இறகு இடு என்பது போலாகும். நாம் என்ன கையால் ஆகாத கயவர்களா ! அரசர்கள் ஒரு காரியத்தைக் கைக்கொள்ள வேண்டும் என்று யோசிக்கின், அவர் உறவின் முறையார் என்றும், தந்தையென்றும் பார்ப்பது உண்டா ! பிருதிவிராஜன் மேல்

வயிரங் கொண்ட சம்யுக்தை என்பவளுடைய தந்தை ஜெயசந்திரன் என்பவன், மகள் என்றும் பாராமல், அவள் நலம் அழிவதையும் நோக்காமல், கோரிமகம் மது என்பவனைத் துணையாகக்கொண்டு சென்று, போர் புரிந்து பிருதிவியை வெல்ல முடியாமல், முடிவில் சூழ்ச் சியால் அவனைக் கொன்று தன் வயிரத்தைப் போக்கிக் கொள்ளவில்லையா? அவ்வாறிருக்க நாம் ஏன் இன்ன மும் பேடிகள் போல் இருக்க வேண்டும்" என்று, ஏதோ நீதிகளை எடுத்துக் காட்டுகிறவன் போலக் கூறிக் கொண்டே வந்ததும், திடீரென்று அவ்வுரைகளை அறவே கைவிட்டு விட்டுச் சிறிது நேரம் அவன் பேசா மல் இருந்தான்.

இராஜவர்மனனவன் மந்தவர்மன் மொழிகளைக் கேட்டுக் கொண்டிருந்து, திடீரென்று அவன் மௌன முற்றதும், அவனைக் கூர்ந்து நோக்கினன். பிறகு அவனை விளித்து "மந்தவர்மா! என்ன யோசிக்கின்ருய்! எனக்கு முடிவு ஒன்றும் சொல்லாமல் ஏதோ யோசனை யில் ஆழ்ந்து விட்டனையே காரணம் என்ன? சீக்கிரம் எனக்குத் தெரிவிப்பாய்" என்று கேட்டான்.

அந்த மொழிகளைக் கேட்ட மந்தவர்மன் சகோ தரனைப் பார்த்துச் சிரித்து "அண்ணு! நான் கையில் வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்காகக் கடைத் தெருவிற்குச் சென்றவன் போல் ஏதேதோ பேசிக் கொண் டிருந்துவிட்டேன். அவ்வழிகளால் நமக்குக் கைமேற் பலன் ஏற்படாது. ஆதலால், நான் இப்

போதே வேறொரு மார்க்கத்தைக் கண்டறிந்தேன். அதுவே நமக்குச் சீக்கிரத்தில் பலனளிக்கக் கூடியதாகும். அது என்னவென்னில் நம் தந்தையாகிய கிழவரை நாம் எதிர்க்கவும் வேண்டியதில்லை. அவரை அரசைத் தாரும் என்று கேட்கவும் வேண்டியதில்லை. அக்கிழவரைச் சமயம் பார்த்துக் கொன்று விடுவது சாலச் சிறந்ததாகும். அப்பழியும் நம்மைச் சாரா வண்ணம் அந்த ஞானவர்மன் மேல் சுமத்தி, அவனையும் தொலைத்து விடுவோமாயின், பின்னர் அரசு நம்கைக்கு எளிதில் சிக்கிவிடும். இதுவே என் முடிவான யோசனை. இதனை நீர் கைக்கொள்ளின், அதன் பலனாய் நீரே அரசாட்சியை அடைவீர். இல்லையேல் ஆட்சியைக் கொள்ள நமக்கு வேறு சூட்சி இல்லை" என்பதே என்று கூறி முடித்தான்.

தந்தை வளர்க்க வளர்ந்து பிந்திய காலத்தில் உதவவேண்டி யிருக்க, மக்கள் தன்மையை, மாணவர்களே! இவர்களிடம் காணுங்கள்: இந்தத் தன்மையையுடையவர்கள் உண்மையான பிள்ளைகள் ஆவது எங்ஙனம்? இவர்கள் யமன் அன்றோ ஆவர்! ஆயினும் குற்றத்திற்குத் தகுந்த தண்டனை ஒன்று உண்டு அல்லவா? அது அவர்களை எப்படி விடுகிறது என்று பார்ப்போம்.

மந்தவர்மனுடைய சொந்த மொழிகளைக் கேட்ட இராஜவர்மன் முதலில் சிறிது கலங்கினனே எனினும், முடிவில் அம்முடிவையே அவனும் நிலை நாட்டிக்கொண்டான். கெடுமதி கண்ணுக்குத் தோன்றாது என்றபடி

அவர்கள் அன்றிரவே அக்காரியத்தைச் செய்து முடிக்கவும் தம் தோழர்களோடும், வேலையாட்களோடும் பேசி, அதற்குரிய சூழ்ச்சிகளையும் தேடிக்கொண்டு சமயம் பார்த்திருந்தார்கள்.

துஷ்ட சகோதரர்கள் தம்மில் ஒருவன் நற்குணம் உடையவனாக இருந்தால், அவன் அந்தத் துஷ்டர்களுக்கு நல்ல வழிகளைப் போதிக்கத் தொடங்குவானானல் அது, ஞானமுங் கல்வியும் நவின்ற நூல்களும் ஈனருக் குரைத்திடி லிடர தாகுமே என்றபடி முடிகிறது என்பது, இவர்கள் வாய் மொழியால் நமக்கு நன்கு விளங்குகின்றதல்லவா?

## 6-ஆம் அத்தியாயம்

### பழியோரிடம் பாவமோரிடம்

தேவவர்மனுக்குத் தன் இளைய மகன் ஞான வர்மன் உயிர் தப்பியதையும், மூத்த மக்கள் செய்த கொடுமைகளையும், நினைக்க நினைக்க ஒரு புறம் துக்கமும், ஒரு புறம் கோபமும் மாறி மாறித் தோன் றிக் கொண்டே இருந்தது. அதனால் அன்றெல்லாம் அவன் மனச் சமாதானமின்றி அவையில் வீற்றிருந் தான். அன்று நடத்த வேண்டிய செயல்களை அவன் ஒருவாறு கவனித்து முடித்தான். பலருக்கும் பற்பல நீதிகளைப் போதித்தான். முடிவில் தன் மூத்த குமா ரர்களின் இழி தகைமையை நினைத்துச் சிறிது நேரம் விசனமும் அடைந்தான். மாலை யாவதற்குள் அரச சபை கலைந்தது. ஆண்டிருந்தவர்கள் தத்தம் இடங் களுக்குச் சென்றனர்.

தேவவர்மன், இளைய மகன் ஞானவர்மனுடன் அரண்மனையை அடைந்து, மாலைக் கடன்களை முடித் துக் கொண்டான். அவன் சிறிது நேரம் தனித்து உட் கார்ந்து, கடவுளைச் சிந்தித்த வண்ண மிருந்தான். ஞானவர்மன் தன்னிருப்பிட மடைந்து, அவனுக்குரிய காரியங்களைக் கவனித்துக் கொண்டிருந்தான். இரவு மணி எட்டடித்ததும் அவரவர்கள் உணவு முடித்துக்

கொண்டு, சிறிது நேரம் உலவி விட்டுப் படுக்கைக்குச் சென்று விட்டார்கள். தேவவர்மன் பத்து மணி வரையிலும் தூக்கம் பிடியாமல் படுக்கையில் புரண்ட வண்ணமாக இருந்தான். அரசனைக் காத்துக்கொண்டிருந்த காவலர்களும் உறங்குவாராயினர். சுமார் பன்னிரண்டு மணிக்கு அரசனுக்குத் தூக்கம் வந்தது. அவனும் தூங்கத் தொடங்கினன்.

காலை முதற்கொண்டே சமயம் பார்த்திருந்த இராஜவர்மனும், மந்தவர்மனும், தம்மாள்களுடன் தம் இடம் விட்டு வெளியே புறப்பட்டு, அரசனுடைய பள்ளி யறையை அணுகுவாராகிச், செல்லும் வழிகளில் தம்மை யாராவது நோக்குகிறார்களா என்று சுற்றும் முற்றும் பார்த்தபடியே நடந்தனர். அவர்களுடைய வேலைக்குத் துணை செய்வதாகவே அந்த இரவில் எல்லாரும் நன்றாய்த் தூங்கிக்கொண் டிருந்தார்கள். சென்றவர்களில் அரசன் மக்கள் தவிர, மற்றவர்கள் ஆங்காங்கு காவலுக்காகக் குறிப்பிட்ட விடங்களில் நின்று விட்டார்கள். இராஜவர்மனும், மந்தவர்மனும் அரசனுடைய பள்ளி அறையை அடைந்தார்கள். அங்கு அரசன் அயர்ந்து தூங்குவதைக் கண்டார்கள். இராஜவர்மன் தேவவர்மனுடைய அருகில் சென்று நின்றான். மந்தவர்மனோ அந்த அறைக்குள்ளேயே சுற்றிச் சுற்றிப் பார்த்துக்கொண் டிருந்தான். அருகு சென்றவன் தன் இடையிலிருந்த குத்து வாளைக் கையிலெடுத்து, அரசன் மார்புக்கு நேராக மேலே தூக்கிப் பிடித்தான்.

தங்கையைக் கொல்ல எந்த மந்தனுக்கு துணிவு ஏற் படும்? இராஜவர்மன் கைகள் நடுங்கத் தொடங்கின. அந்த நடுக்கத்தினலேயே அவன் கையினின்றும் குத்து வாள் நழுவி அரசன் மார்பின் மேல் விழுந்து காய முண்டாக்கி விட்டது.

அரசன் வலியினுலும் நல்ல தூக்கமானதாலும் கால், கரங்களைச் சிறிது அசைத்தான். அக்கணமே இருவரும் அரசன் கண்டு கொள்ளாமலிருக்குமாறு சடுதியில் வெளியே ஓடி மறைந்துவிட்டார்கள். பின் அரசன் வலியினுல் புரண்டு, புரண்டு கூச்சலிட்டான். அச்சமயம் வெளியே ஓடி மறைந்த இருவரும் அப் போது தான் சத்தங் கேட்டு வருகிறவர்களைப்போல அங்கே ஓடிவந்து, இரத்த மொழுக அரசன் துன்பப் படுவதைக் கண்டு, அவனுக்கு உபசாரம் செய்பவர் களைப் போல் நடித்தார்கள். இராஜவர்மன் தான் காலையிலேயே தயாரித்து வைத்திருந்த ஒருவிதமான மருந்தை அவன் மூக்கின் முன்காட்டி, புண்ணிலும் சிறிது தூவினுன். உடனே தேவவர்மன் மயக்கங் கொண்டு மூச்சடங்கினவனுனன்.

மந்தவர்மன் உடனே அறைக்கு வெளியே சென்று கூச்சலிட்டான். அதனுல் அரண்மனையிலுள்ளார் யாவ ரும் விழித்துக்கொண்டு ஓடோடியும் அவனை யணுகி, விஷய முணர்ந்து அரசன் படுக்கையிடம் செல்லத் தொடங்கினுர்கள். அவர்களுக்கு முன் ஞானவர்மனும் அங்கு சென்று பார்த்தான். இராஜவர்மன், ஞானவர்

மனைக் கண்டதும், அழுது பாசாங்கு காட்டி "தம்பீ இங்கே கேட்ட கூச்சலால் நான் ஓடிவந்து பார்க்க, ஒருவன் நம் தந்தையைக் குத்தி விட்டுச், சாளரத்தின் வழியாகக் குதித்து ஓடக் கண்டேன்" என்று கூறினன். அவ்வுரை கேட்டதும் ஞானவர்மன் திடுக்கிட்டு, அவன் காட்டிய சாளர வழியாகக் கீழே எட்டிப் பார்த்தான். அங்கு ஒருவன் உருவம் தெரியாமல் ஆடைகளை அணிந்துகொண்டு, வாளுங் கையுமாக நிற்கக் கண்டான். அவனைக் கண்டதும் ஞானவர்மன் மனங் கொதிப்பேற, உடனே அவன் வாளைக் கையில் பிடித்தவண்ணமாக அந்தச் சாளரத்தின் வழியாகவே வெளியே குதித்து, அங்கு நின்றவனைத் துரத்திக் கொண்டு சென்றான்.

வேடந் தரித்து நின்றவன் முன்னலேயே இராஜவர்மனல் தயார் செய்யப்பட்ட ஒரு வேலைக்காரன். அவன் ஞானவர்மனைக் கண்டதும் வெகு வேகமாக ஓடினன். ஞானவர்மனும் அவனை விடாமல் துரத்திச் சென்று, சுமார் ஒரு மைலுக் கப்பால் அவனைப் பற்றி, அவனுடன் போர் புரியத் தொடங்கினன். வேடதாரி போரைத் தொடங்குகையில் ஏதோ ஒரு வித சத்தஞ் செய்தான். அடுத்த நிமிஷத்தில் பலர் வந்து ஞானவர்மனை வளைத்துக்கொண்டு சண்டை செய்தார்கள்.

ஞானவர்மன் விடாமல் சண்டை செய்தானயினும் பலரிடத்தினின்றும் அவன் தப்ப அது சமயம் முடியாமையால், அவர்களால் அடிபட்டு விழுந்தான். விழுந்த

வனை அக்கொடிய வேலைக்காரர்கள் நன்ருகக் கால் களையும், கைகளையும் கட்டித் தூக்கிக் கொண்டுபோய் அருகில் ஓடிக்கொண் டிருந்த நதியில் வீழ்த்தி விட் டார்கள். அடிகளாலும், கட்டுகளாலும் ஞானவர்மன் மிகவும் களைத்து மூர்ச்சையாளு ருதலால், அவன் ஆற் றில் பிணம் போல் மிதந்து செல்லத் தண்ணீர் அவனை அடித்துக்கொண்டே போயிற்று.

ஞானவர்மன் சாளர வழியே குதித்தோடிய நிமி டமே அரண்மனையிலுள்ளவர்கள் யாவரும் அரசன் பள்ளியறையைச் சேர்ந்தார்கள். அங்கு அரசன் பிணம் போல் கிடப்பதையும், இராஜவர்மன் வெகு துக் கத்துடன் அரசனருகில் தரையில்கி டந்தவண்ணம் அழுதுகொண் டிருப்பதையும் கண்டார்கள். அது கண்ட சிலர் அவர்களை யணுகிக் காரணம் வினவ, அப் போது இராஜவர்மன் சிறிது முகத்தை மேலெடுத்துப் பார்த்து, "ஐயோ! தந்தையை அநியாயமாய்க் கொன் றுவிட்டானே ஞானவர்மன். நாங்கள் வருவதைக்கண்டு அவன் சாளரவழியாகக் குதித்தோடி விட்டானே! அவனை யல்லவோ தந்தையார் மிகவும் உண்மையான வன் என்று நம்பியிருந்தார். அவன் உண்மையானவன் போல நடித்துக், கடைசியில் நம்பினவரையே கொன்று விட்டானே. நான் என்ன செய்வேன், கடவுளுக்கும் கண் இல்லையோ" என்று மிக உண்மை யானவன் போல் அழுது நடித்தான்.

வந்தவர்கள் யாவரும் இராஜவர்மன் மொழி

களில் நம்பிக்கை வைத்து அவனைத் தேற்றத் தொடங்கினார்கள்.

சிறிது நேரத்திற் கெல்லாம் சிலர் ஓடோடியும் வந்து, இராஜவர்மனைப் பார்த்து "ஐயனே நாங்கள் எங்களால் ஆனவரையில் கொலையாளியைத் தொடர்ந்து சென்றோம், ஆனால் பயனொன்றும் நேரவில்லை. இங்கிருந்து குதித்தோடிய அந்தக் கள்ளன் ஆற்றில் குதித்து வெள்ளத்தோடே அடித்துக்கொண்டு போகக் கண்டோம். அந்தக் கள்ளனிடத்தில் ஞானவர்மனை உமது சகோதரருடைய குறிகளையும், நடையையுங் கண்டோம். அந்தத் தோற்றம் எங்களுக்கு மிக்க ஆச்சரியத்தை விளைவித்தது. அவ்வளவுடன் நாங்கள் திரும்பி வந்துவிட்டோம்" என்று சொல்லி முடித்தார்கள். அது கேட்டு அங்கிருந்த சிலர் "பின் நடக்க வேண்டியவைகளைப் பாப்போம், திருடன் என்றுங் கிடைப்பான். பல நாளைய திருடன் ஒரு நாளில் அகப்படுவான் என்பது பொய்த்து விடுமா? நாமும் அதற்குத் தகுந்த முயற்சியைப் பின்னால் எடுத்துக்கொள்வோம். ஆற்றில் விழுந்த திருடன் உயிர் தப்பியிருப்பின், அவன் கிடைப்பது என்றும் உண்மை. இனி நடக்க வேண்டியவைகளைக் கவனிப்போம்" என்று கூறினார்கள். அது கேட்டு இராஜவர்மனும், மந்தவர்மனும் சரி என்று சம்மதித்தார்கள். மந்தவர்மன் எந்தக் காரியத்திலும் தலையிடாமல் மந்தனாகவே தான் ஒவ்வொரு சமயத்திலும் காணப்பட்டான். ஆனால்

சூழ்ச்சிகள் எல்லாம் மந்தவர்மனுடையவே என்பதை ஒருவரும் மறக்க முடியாது.

எவ்வளவுக் கெவ்வளவு சிக்கிரமாகக் காரியங்கள் நிறைவேற வேண்டுமோ, அவ்வளவுக்கு அவ்வளவு நன்மை என்பதையே அரச குமாரர்கள் கருதி யிருந்தார்கள். ஆதலால்,யாவர்க்கும் அரசன் திடீரென்று இறந்த காரணத்தை வெளிப்படுத்திப் பிணத்தையும் விரைவில் அடக்கம் செய்ய முயற்சி தேடினார்கள்.

மடயர்களே! இன்று நீர் குற்றஞ் செய்துவிட்டு, நம்மை ஒருவரும் அறிந்து கொள்ளவில்லை ஆதலால், நாம் குற்றத்தினின்றும் தப்பித்துக் கொண்டோம் என்று மகிழவேண்டாம். உங்களுக்குக் கைமேற் பலன் கிடைத்துவிடும்; இஃது உண்மை. அரசன் அன்று கொன்றால் தெய்வம் நின்று கொல்லும் என்னும் மூதுரையை அறியீரோ! அறிவிலிகளே! நும் இழி தகைமை எளிதில் வெளியாகக் காண்பீர்” என்று கூறிக் கேலி செய்து கொண்டு, உலகம் சிரிப்பது போன்று, சூரியன் குணதிசையினின்றும் தோன்றினன்.

தேவவர்மன் மாண்டான் என்ற செய்தி நகர் முழுவதும் பரவியது. மக்கள் யாவரும் துக்கங் கொண்டார்கள். பலர் பலவாறு ஞானவர்மனைத் தூஷித்தார்கள். சிலர் மாத்திரம் ஞானவர்மன் விஷயத்தில் சந்தேகங்கொண்டே யிருந்தார்கள். நகரமெங்கும் துக்கம் நிறைந்திருந்தது, ஒருவரும் வேலையென்பது செய்யவில்லை. எவரும் உணவு கொள்ளவில்லை. ஆடு மாடு

களும் மேய்ச்சலுக்குச் செல்ல வில்லை. தெருக்களி லெங்கும் கருப்புக் கொடிகள் பறந்துகொண் டிருந்தன.

அரண்மனையில் அன்றே இராஜவர்மனின் கட்டளை கள் தலைவிரிந்தன. ஆயுதத்தால் இறந்த உடலை வயித் தியர்கள் சோதனை செய்ய வேண்டிய அவசியமில்லை என்று மறுத்தான். அரண்மனையின் சவங்களுச்கு வழக்கப்படிச் செய்யவேண்டிய சில சடங்குகளையும் தவிர்த்தான். எல்லாம் விசனத்தாலேயே தடுக்கப்பட் டன என்று வெளியார் எண்ணுமாறும் அபிநயித்தான். தன் ஆட்களைக் கொண்டே சவச் சடங்குகளை முடித் துப் பெட்டியில் அடக்கினன். அரசனுக்கென்று முன் னமேயே தயாரிக்கப் பட்டிருந்த தொரு பெரிய மாளி கையின்கண் சவத்தை ஊர்வலத்துடன் கொண்டு சென் ருன். அங்கு அப்பெட்டிக்குச் செய்யவேண்டிய கிரி யைகள் முடிந்ததும், அந்த மாளிகையில் நடுவி லிருந்த தொரு அலங்காரமான மேடையின் உட்பக்கமிருந்த வோர் அறைக்குள் அது வைக்கப்பட்டது. அரசர்கள் இறந்தால், அவர் சவங்களை அடக்கம் செய்தபின், வருஷ மொரு முறை குடும்பத்தார் அவ்விடம் சென்று. பெட்டியைத் திறந்து, சவத்தைக் கண்டு வருவது வழக்கம். அதனல் அவர்கள் பெட்டியைப் பூட்டா மல் வைப்பது வழக்கம். அவ்வாறே அரசனுடைய சவமும் அன்று வைத்துச் சவம் கெடாதிருக்கப் பல வாசனைத் திரவியங்களும், மருந்துகளும் அதனுள்

சேர்க்கப்பட்டன. சவச்சடங்கு முடிந்ததும் எல்லோரும் தத்த மிருப்பிடம் போனூர்கள். அரச குமாரர்களும் அரண்மனையை அடைந்தார்கள்.

மாளவம் அரசனை இழந்ததனுல் உடனே வேறு தலைவனை நியமிக்க எல்லாரும் மறுநாளே ஆலாசித்தார்கள். இராஜவர்மனுக்கே மகுடம் சூட்டுவதெனவும் தீர்மானித்தார்கள். இராஜவர்மனும் தான் அரசாட்சியைச் சீக்கிரத்தில் அடைய நேர்ந்ததைப் பற்றி அளவிலாத ஆனந்த மெய்தினன். தன் சூழ்ச்சிகள் யாவும் தவருமல் நடந்தேறி வந்ததைப் பற்றி, மந்தவர்மன் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவே கிடையாது. அவன் அடிக்கடித் தன் பெருந் திறத்தையும், புத்தியின் சூழ்ச்சியையும், அவனுடைய நண்பர்களுடன் சொல்லிச் சொல்லி மகிழ்ந்துகொண்டிருந்தான்.

அரசன் மாண்ட மூன்ரு நாளே இராஜவர்மன் முடி சூட்டப் பெற்ருன். அவனுக்குத் துணையாக மந்தவர்மன் சேனதிபதியாக நியமிக்கப் பட்டான். அவர்களைச் சார்ந்த நேயர்களும் இராணுவத்திலும், அரண்மனையிலும் உயர்ந்த உத்தியோகஸ்தர்களாக நியமிக்கப்பெற்று அதிகாரம் செலுத்துவாராயினர்.

இக்காலத்தில் ஒரு உத்தியோக சாலையின்கண் ஒருவன் சிறந்த வேலையில் அமர்ந்திருப்பானயின், அவன் கற்றவர், கல்லாதவர் என்றும்; அறிவு, ஒழுக்கமுடையார் என்றும் கருதாமல், மேலுக்குச் சொல்லுவ தொன்றும், உள்ளூறச் செய்வ தொன்றுமாக

இருந்து, எத்தனை மடயர்களைத் தொழில் பெறச் செய்து விளங்குகின்றான். அதற்குக் காரணம் ஆராயின் சாதியர்கள் என்றோ, சிநேகிதர்கள் என்றோ, உறவினர் என்றோ, ஏதேனும் ஒரு காரணத்தானன்றி அவ்வாறாக முடியாதென்று தெரிகிறது. வேலைக்கு ஆள் வேண்டும் என்று பத்திரிகைகளில் விளம்பரப் படுத்தி விடுவது மாத்திரம் எங்கும் வழக்கமே யொழிய, உள் நோக்கின் உண்மையாகப் படித்துத் தேறிய பத்திரங்களுக்கெல்லாம் அவ்விடத்தில் பதில் ஒன்றும் கிடையாமல், ஏதோ சாக்குப் போக்குகள் சொல்லப்பட்டு விடுகின்றன. வேலை யாருக்குக் கிடைத்த தென்றால், தலைவனுக்குத் துணைவன், அல்லது உறவினன், அல்லது தொண்டு செய்பவன், அல்லது வேறு வகையில் அவன் மனத்தைத் திருப்தி செய்தோன் இவர்களுக்கே சென்று விடுகிறது.

தற்கால உத்தியோக சாலைகளில் அறிவாளிகள், கல்வியுடையோர் (ஆங்கிலப் பட்டம் பெற்றோர்) என்று சீரிய தொழிலாளராக விளங்கும் மேதாவிகளில் பெரும்பாலார் மேற்கொள்கையுடன் வாழ்ந்து, சீரும், சிறப்பும் அடைகின்றார்கள் என்றால், நவாப்தர்பார் என்று சொல்லுவது போலச் சிற்றரசர்கள், குறுநிலமன்னவர்கள், அதிலும் இமயமலைக்கும், கன்னியா குமரிக்கும் இடையிலே உள்ள நிலத்தையே ஐம்பத்தாறு தேசங்களாகப் பிரித்து ஆண்டு, இதுவே உலகம்; இதை விட வேறு நிலம் கிடையாது; எறும்புக்குக் கோட்டங்கைச்சி

நீர் கடல் என்றே எண்ணுவது போல, இருந்த மன்னர்களின் அறிவும், அவர்களினும் தாழ்ந்த குணமுடைய மக்களின் பெருமையும் சொல்லவும் போமோ !

நாகரிகம் படைத்தோம், கல்வியறிவு பெற்றோம், சிறந்து விளங்குகிறோம், என்று கூறுவோர்களிடமே குற்றங்கள் நிறைந்திருக்கக் காணுந்தோறும். பிறரைப் பற்றி நாம் எண்ண வேண்டிய தில்லை. ஆனால் மாணவர்களே! நீவீர் மேற் கூறிய அறிவாளிகள் என்று சொல்லப்பட்ட மூடர்களைப் போலவும், கற்றறி மேதிகளைப் போலவும், கைகட்டுச் சேவகம் செய்யக் கனவிலும் கருதாதீர்! நன்மையைக் கடைப் பிடித்து, நாடொப்பன மேலுக்கு மாத்திர மன்றிச் செய்து,உண்மையறிந்து, பக்ஷ பாதமின்றி, எவருக்கும் மதப் பற்று, கல்விச் செறுக்கு, துணைவலி இவைகளால் தீமை புரியாமல், வாழ்வீர்களாக! இத்தன்மையைக் கைக்கொள்ளின், நீங்கள் உண்மை மக்களாவீர் ! இல்லையேல் மக்களாயினும் மாக்கள் என்றே பிறர் உம்மைக் கருத நேரும். மாணவர்களே ! இதனை நன்கு உம்முடைய மனத்திற் பதித்துக் கொள்ளுவீராக.

இராஜவர்மன் அன்று முதல் அரசாட்சியை நடத்தத் தொடங்கினன். அரசில் அறிவுடையோர் எத்துணைவர்கள் இருந்தாரேனும், அவர்களுடைய சொற்களைச் சிறிதும் இராஜவர்மன் மேற்கொள்வது இல்லை. தன்னறிவே தனக்குப் பெரிது, என்று ஆண்டானே யன்றி, தனக்கு வெகு புத்தி யுண்டாகினும்

வேறொருவர் தம்புத்தி கேட்க வேண்டும் என்ற உரையை அவன் அவலமாக்கியே வந்தான். இராஜ வர்மன் ஆட்சியை நாம் விளக்காமல் சுருக்கிக் கூற வேண்டுமானால்,

துற்சனன் தனக்குத் தானுந்
  துரைத்தனங் கொடுத்தா லென்றும்
சற்பனை துரோகம் கேடு
  தானினைந் திடுவா னன்றோ?
மற்கடந் தானு மாகி
  வாலிலே தேளுங் கொட்டி
உற்றிடங் கொள்ளி யீந்தால்
  உலகெலாஞ் சுடும்போ லன்றே

—தனிப்பாடல்

என்னும் செய்யுளை நினைத்துக் கொண்டால் அதன் மேல் ஒன்றும் யோசித்துப் பார்க்க வேண்டியதில்லை. அதனுள்ளேயே எல்லாவற்றையும் நாம் அறிந்து கொள்ளலாம். அத்தன்மையில் அவன் ஆட்சி இருந்து வந்தது.

## 7-ஆம் அத்தியாயம்

### வறுமையிற் செம்மை

ஓடம்விடும் இடமது மணற்சுடும் சுடும் இடமும்
ஓடம் மிகவே நடக்கும்
உற்றதோ ராற்றின்மடு மேடாகும் மேடெலாம்
உறுபுனல் கொள் மடுவாயிடும்
நாடுகா டாகுமுயர் காடுநா டாகிவிடும்
நவில்சகடு மேல்கீழதாய்
நடையூறு சந்தைபல கூடுமுடனே கலையும்
நன்னிலவு மிருளாய் விடும்
நீடுபகல் போய்பின்பு இரவாகும் இரவுபோம்
நிறைபகற் போதாய்விடும்
நிதியோர் மிடுத்திடுவர் மிடியோர் செழித்திடுவர்
நிசமல்ல வாழ்வு கண்டாய்.

—தருபாததாசர்

வெள்ளம் பெருகி யோடும் நதிகளிலும், ஆழமான நீர் நிலைகளிலும் ஓடங்களின் மூலமாக மக்கள் பிரயாணம் செய்வார்கள். அவ்வாறான இடங்கள் ஒரு காலத்தில், நீர் வற்றி அங்குள்ள மணல் நடப்பவர்கள் காலைச் சுடுவதும் உண்டு. அப்படியே மணல் தரையாக விருந்த இடங்களில் ஒருகாலத்தில் நீர் நிறைந்து படகுகளால் கடந்து செல்ல நேரிடுவதும் உண்டு. வெள்ளத்தினால் முதல் முறையில் பள்ளமாகி 'மடு" என்று பெயர் பெற்ற இடம், மறு முறை வெள்ளத்தால் தூர்ந்து

மேடாகி விடுவதும் உண்டு, பெற்றமும், கழுதையும் மேய்ந்த அப்பாழ், பொற்றொடி மகளிரும் மைந்தரும் சேறிந்து, நெற்பொலி நெடுநகர் ஆயினும் ஆகும் என்ற வாறு, காடுகளும், சுடலைகளும், வெற்றிடங்களும், நகரங்களாகவும், சிறந்த ஆலயங்களாகவும் மாறுவது இயல்பு. அன்றி ஏழ் நிலை மாடம் கால் சாய்ந்துக்குக் கழுதை மேய்ப் பாழ் ஆகினும் ஆகும் என்றவாறு நகரங்களழிந்து வெற்றிடமாவதும் இயல்பே. வண்டி வண்டியி லேறுவதும், ஓடத்தி லேறுவதும், ஓடம் வண்டியி லேறுவதும் வழக்கமே. சந்தைக் கடைகள் ஒரு நாளைக்குள் சிலமணி நேரம் விரைவில் கூடி அங்ஙனமே கலைவதும், நாடக சாலைகளிலும், படக்காட்சிச் சாலைகளிலும், மற்றும் பல கூட்டங்களிலும் மக்கள் விரைவில் கூடி, விரைவில் நீங்கி அவ்விடங்களை வெற்றிடங்களாக்குவதும் உலக வழக்கமே. சந்திரன் சிறிது நேரம் ஒளி வீசலும், அடுத்தக்கணமே இருளாதலும், பகல் வருதலும், போதலும் நிச்சயமே.

சிறந்து விளங்கிய செல்வர்களும், அறிஞர்களும் ஒருகால் தன்னிலையினின்றும் வேறுபட்டு வருந்துவதும், துற்குணரும், அறிவிலிகளும், ஏழைகளும், ஒருகால் செழித்து வாழ்தலும், உலகில் நடைபெற்று வரும் தொழிலல்லவோ? அத்தகைய அற்ப வாழ்வினைக் கண்டு மதிமயங்கிப் போதல் இழிஞர் வழக்காகுமே யன்றி, சீரியோர் செயல் ஆகாது, அறிவுடையார் அங்ஙனம் தாழ்ந்தாரேனும், அவர் நற்குண நற்

செய்கை களினின்றும் ஒருக்காலும் விலகார். ஏழை யாயினும் அறிவுடையவனாயின் அவன் செல்வம் வந்து விட்டதே யென்று செறுக்குறாமல் முந்தைய சிந்தையுடனேயே செயல் புரிந்து வருவானே. யன்றி,

சிறியரே மதிக்குமிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செறுக்குமூடி வாயுளார் மூக ராவார்
பறியணி செவியுளாரும் பயில்தரு செவிட ராவார்
குறிபெறு கண்ணுளாரும் குருடராய் முடிவரன்றே

—**குசேலோபாக்கியானம்**

என்றபடி குணங்கெட்டு மூகையராகவும், செவிடராக வும், குருடராகவும் திரிந்து விடுவது இல்லை.

மாளவத்திற்கு அரை மைல் தூரத்தில் சிறு கிராமம் ஒன்று இருந்தது அதில் வலைஞர்கள் பலர் வசித்து வந்தார்கள். அவர்களுள் மிகவும் ஏழை யான செம்படவன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் ஆண்டியப்பன் என்பது, அவன் தினந்தோறும் வெளியே சென்று நீர் நிலைகளைத்தேடி, அவைகளின் றும் மீன்களைப் பிடித்துக் கொண்டு வந்து விற்று, அத னால் வரும் பணத்தைக்கொண்டு ஜீவித்து வந்தான். அவன் ஏழையே ஆயினும், தான் தேடும் பொருளைக் கொண்டு பிறருக்குத் தன்னாலான உதவியைப் புரிந்து வருவதுண்டு.

ஆண்டியப்பன் தெய்வ பக்தியுடையவன்; நற்குண நற்செய்கைகள் நிரம்பப் பெற்றவன். அவன் எப்போ தும் ஒழுக்கத்தினின்றும் வழுவான். 'மீன்களைப் பிடி

த்து உயிர் போக்கும் ஒருவன் ஒழுக்க முடையவனுவ தெப்படி?" என்று இங்கு உமக்குச் சந்தேகம் உண்டாக லாம். மரபு பற்றி வந்த தொழில் நல்லதே யாயினும், தீயதே யாயினும், அதனையே மேற்கொள்வது பலருக் கும் ஒத்ததே. ஆயின் அவர்கள் கொடுங் குணமுடைய வர்களாகத்தான் இருக்க வேண்டும் என்பது எள்ளள வும் பொருத்த முடையதன்று.

மாமிசமே மனிதவுணவு என்று கருதி, நாளும் விடாமல் நன்கு தின்று வாழும் மக்கள் அறிவுடையார் எனவும், ஆராய்ச்சிக்காரர் எனவும், புதுமை புதுமை யாக உலகில் ஒப்புயர்வற்ற காரியங்களைச் செய்கிருர் கள் எனவும், அரிய பெரிய இயந்திரங்களைக் கண்டு பிடிக்கிருர்கள் எனவும், பிற மாந்தரர்களால் போற் றப்படுகிருர்கள் எனின்; மேற் கூறிய பெருமைகளை யடைந்து வாழும் பேறறிஞர்களின் வயிறு நிரம்பவேண் டியும், அதன் மூலமாகத் தான் வயிறு பிழைத்து வாழ வேண்டியும் அம்மாமிசப் பிண்டத்தைத் தேடித்தருப வன் ஒழுக்கங் கெட்டவன், அறிவில்லாதவன் என்னும் சொற்களுக்கு ஏன் அடிமைப்பட்டவன் ஆகவேண் டும்? அவனிடம் சிறந்த குணங்கள் பறந்து தோன்றி வாழுமன்ருே! ஆதலால் அச்சந்தேகத்தை ஒழித்துக் கொள்ளுவோமாக.

ஆண்டியப்பன் வழக்கப்படி ஒரு நாள் பறியும், தூண்டியும் கொண்டு சென்று, ஆற்றங் கரையில் ஒரு புறம் அமர்ந்து மீன்களைப் பிடித்துக்கொண்டிருந்தான்.

அப்போது அவன் தனக்குள் "என்ன காலம் வந்திருக் கிறது. இந்த நாட்டு அரசன் இருந்து ஆண்டபோது எவ்வளவு நன்ருகக் குடிகள் வாழ்ந்தார்கள். ஏழை யாகிய என்னைப் போன்றவர்களுக்கு அந்த அரசன் தேவவர்மன் எவ்வளவு அன்பு காட்டி, உணவுக்கும் வேண்டியவைகளை அடிக்கடிக் கொடுத்து வந்தானே. அந்த அரசன் இறந்துவிட்டானே! இனி அவன் மக்கள் அல்லவோ அரசுக்கு வருவார்கள்! அவர்கள் மிகவும் கொடியவர்கள் ஆமே! அவர் காலத்தில் கடவுளே! இவ் விடத்தில் நான் எப்படிக் காலந் தள்ள முடியும். வயது உடையவர்களே வருந்துவார்கள் என்ருல், என்னைப் போன்ற கிழவர்கள் பாடு என்ன ஆகும்.

கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே—வம்புசெறித்
தீங்கினர்தங் கண்ணிற் றெரியாத தூரத்தில்
நீங்குவதே நல்ல நெறி

—நீதி வெண்பா

என்று பெரியோர்கள் கூறுவார்களே. அப்படி இந்த நகரில் இனி இருந்து வாழ்வதைக் காட்டிலும், வேறு எங்கே யாவது போய்த் தங்கினுல் நலம் என்று தோன் றுகிறது. கோடுங்கோன் மன்னன் வாழு நாட்டைக் காட்டிலும், கடும்புலி வாழும் காடு நன்று என்றபடி, நான் இந்த ஊரை விட்டு நீங்கி விடுவது நலம் எனத் தெரிகிறது. அதுதான் எனக்கு நல்லவழி. கடவுளே! நான் உன்னையே நம்பி இருக்கிறேன். எனக்கு இந்தக் கிழவயதில் துணையும் கிடையாது. என்னைக்

காப்பாற்ற ஒரு பிள்ளை இருந்தான். அவனும், ஆ தெய்வமே! நீ மனம் பொறுக்காமல் உன்னிடம் அழைத்துக் கொண்டாய். இனி நான் எப்படிப் பிழைப்பேன்" என்று மனம் துக்கித்த வண்ணமாக இருந்தான்.

அந்தச் சமயத்தில் அவன் தூண்டியைத் தண்ணீருக்குள் இழுப்பதாகத் தெரிந்து, தலை நிமிர்ந்து ஆற்றில் பார்த்தான், அதே வினாடியில் அவன் பக்கமாக ஏதோ ஒன்று ஆற்றில் மிதந்து செல்லக் கண்டான். அதனைச் சிறிது நேரம் உற்று நோக்கினான். பின் அது ஒரு மனிதனுடைய உடலம் என உணர்ந்து, திடீரென்று தண்ணீரிற் குதித்து, நீந்திச் சென்று, அதனைப் பற்றிக் கொண்டு வந்து, மிக வருத்தப்பட்டு எடுத்துக் கரை மீது சேர்த்தான். அந்த உடல் நன்றாய்க் கயிறுகளால் கட்டப் பட்டிருந்தது. அந்தக் கட்டுகளை வெகு விரைவில் வலைஞன் அவிழ்த்தெறிந்தான். கட்டுகளால் இறுக்கப் பட்டதாலும், வாயும் மூக்கும் மூடப்பெற்று இருந்ததாலும், வெள்ளத்தில் வந்த அந்த உடலுக்குள் தண்ணீர் சிறிதும் செல்லாமையால், கட்டுகளினின்றும் விடுபட்டவுடன், சிறிது சிறிதாக மூச்சு வெளிப்பட ஆரம்பித்தது. ஆயினும் உடல் அதிகக் குளிர்ச்சியாக இருந்தமையாலும், எங்கும் பலத்த காயங்கள் பட்டிருந்தமையாலும், நம்புவதற்கு இடமில்லாதவாறு அவ்வுடலின் நிலை காணப்பட்டது. உடனே வலைஞன் அந்த உடலைத் தாங்கிக்கொண்டு, தன் வீடடைந்து, அதற்கு

வேண்டிய சிகிச்சைகளைச் செய்துகொண் டிருந்தான்.

ஆண்டியப்பன் செய்த உதவியினால் உடலில் சூடு ஏற, அது வரையில் மூச்சு மாத்திரம் விட்டுக்கொண் டிருந்த அவ்வுடல் சிறிது விழிகளைத் திறந்து பார்க் கவும், வலைஞன் மனம் கிளர்ச்சி கொண்டது. மாண வர்களே! அவ்வுடல் யாருடையதென்று நீங்கள் அறி ந்து கொண்டீர்களா? அதுதான் ஞானவர்மனுடைய உடல்.

ஞானவர்மன் கண்களை விழித்தவுடன் அவன் சுற்று முற்றும் பார்த்தான். அரண்மனையும், அலங் காரங்களும் புலப்படவில்லை, குடிசையும், கந்தலும், பழம்பாயிற் படுக்கையுமாகத் தான் இருப்பதை உணர்ந்தான். அவனுக்குக் கொலைஞனைத் துரத்திச் சென்று, வழியில் பலரால் தாக்கப்பட்டவரையில் ஞாபகம் இருந்ததேயொழிய, அதற்குமேல் நடந்தவை ஒன்றும் அவனுக்குத் தெரியாததனால் திகைத்தான். ஏதேதோ எண்ணிப் பார்த்தான். ஒன்றும் அவன் ஞாப கத்திற்குப் புலப்படவில்லை. உடனே ஞானவர்மன், பக்கத்தி லிருந்த கிழவனை நோக்கினான். வலைஞன் அவன் பார்வையைக் கண்டு, அவனுடன் பேசத் தொடங்கி, "வாலிபனே நீ யார்? உன் ஊர் எது? உனக்கு நேர்ந்த ஆபத்து என்ன? நீ கயிற்றால் கட் டப்பட்டு வெள்ளத்தில் மிதந்து வரக் காரணம் என்ன? அவற்றை எனக்குச் சொல்லுவாயா?" என்று கேட் டான்,

வலைஞன் மொழிகளால் தன் நிலையை ஒருவாறு ஊகித் துணர்ந்துகொண்டு ஞானவர்மன் மெதுவாகப் பேசத்தொடங்கிக் கிழவனைப் பார்த்து "ஐயா! நான் ஒரு காட்டு வழியாகப் பிரயாணஞ் செய்துகொண் டிருந்தேன். வழியில் சில திருடர்கள் என்னைப் பிடித்து அடித்து, என்னிட மிருந்தவைகளைப் பிடுங்கிக்கொண் டார்கள். நான் அடிகள் பொறுக்கமாட்டாமல் மூர்ச் சையானேன். அவ்வளவுதான் எனக்குத் தெரியும்" என்று கூறித் தன் உண்மை விஷயத்தை மறைத்துக் கொண்டான். ஏனெனில் ஏழை வலைஞன் அவனை அரசன் மகன் எனக் கண்டால், அவன் எல்லாருக் கும் அந்த விஷயத்தைத் தெரிவித்து விடுவான். அத ஞல் தன் காரியம் கெடும் என்று எண்ணிக் கொண்டு அவ்வாறு செய்தான் போலும்!

ஞானவர்மன் வலைஞனை நோக்கி "ஐயா பெரிய வரே! இந்த வூரில் ஏதேனும் விசேஷமிருந்தால் எனக் குச் சொல்லும், நான் உன்னுடைய ஊரைப்பற்றித் தெரிந்துகொள்ள ஆசைப் படுகிறேன்" என்றான். அதைக் கேட்ட கிழவன் "அப்பா என்ன விசேஷம் இந்த வூரில் இருக்கிறது! இந்த வூரை அரசன் ஒரு வன் ஆண்டிருந்தான். அவன் மிகவும் நல்லவன். அவ னுக்குத் திடீரென்று சாவு எங்கிருந்தோ வந்து அவ னைக் கொண்டுபோய் விட்டது. அந்த அரசனை அவ னுடைய மகன் சிறியவன் ஒருவன் குத்திக் கொன்று விட்டதாக ஊர் எங்கும் சொல்லிக் கொள்ளுகிறார்கள்,

தந்தையைக் கொல்லும் பிள்ளையும் ஒருவன் இருப்பானே! அந்தக் கொலைஞன் கொன்றவுடனே ஓடிவிட்டானும். பிறகு அவன் ஊர் பக்கம் திரும்பி வரவேயில்லை என்றும், அவனைத் தேடிச் சென்றவர்களும், வீணுகவே அலைந்து திரும்பி விட்டார்கள் என்றும் சொல்லிக் கொள்ளுகிருர்கள். அதுதான் அப்படி என்று பார்த்தால், இப்போது அரசனுக வரும் இறந்த அரசனுடைய மகன் செய்யும் வேலை எப்படி இருக்குமோ? அப்பா! அவன் ஜனங்களை என்ன பாடு படுத்துவானே! இன்னும் போகப் போக அவன் விஷயம் விளங்கும். அவன் மிகக் கொடியவன் என்று தெரிகிறது. இவவளவுதான் நான் அறிந்த விஷயம்" என்று சொன்னன்.

வலைஞன் கூறிய மொழிகளால் நடந்தன யாவும் உணர்ந்து, ஞானவர்மன் உள்ளுக்குள்ளாகத் துக்கித்து, அதனை அந்தக் கிழவன் உணர்ந்து கொள்ளாதவாறு செய்து கொண்டு, அவனை நோக்கி "எனக்குப் பேருபகாரம் செய்த பெரியவரே! நான் உனக்கு என்ன நன்மை செய்யப் போகிறேன். எனக்கோ கையில் பொருள் கிடையாது. என் தாயும், தந்தையும் சில நாள்களுக்கு முன் திடீர் திடீரென்று இறந்துவிட்டார்கள். ஏழைக்குச் சகோதரன் ஒருவனிருக்கிருன் அவனே முரடன்; அவன் என்னை இனிமேல் நன்ருகப் பார்த்துக்கொள்ள மாட்டான். நானும் அவனுடன் கூடி வாழச் சம்மதிக்கவில்லை. ஆதலால் உன்

னுடைய கிழவயதில் உன்னைக் காப்பாற்றிக் கொண்டு நான் உன் வீட்டிலேயே இருக்க எண்ணுகிறேன். உன்னுடைய விருப்பம் என்னவோ அதைத் தெரிவித்தால் நன்மை எனத் தோன்றுகின்றது" என்றான்.

ஞானவர்மன் கூறிய வார்த்தைகளைக் கேட்டதும் ஆண்டியப்பனுக்கு அளவிட முடியாத மகிழ்ச்சி பொங்கியது. உடனே அவன் ஞானவர்மனைச் சேர்த்துக் கட்டிக்கொண்டு "அப்பனே! துணையில்லா என்னைக் காப்பாற்றுகிறேன் என்று சொன்ன நீ, கடவுளாகத்தான் இருக்கவேண்டும். நானும் மகனையும், மனைவியையும் இழந்தவன். என்னிடம் நீ இருக்க விரும்பினால் அது நான் செய்த பெருந்த தவத்தின் பயனே என்றுதான் கூறலாமேயொழிய, வேறு எவ்வகையாகவும் எண்ண முடியாது. மகனற்ற எனக்குக் கடவுளால் தோன்றிய மகனே! இன்று முதல் இந்தக் குடிசையும், என் பொருள்களும் உன்னுடையதே என்று நினைத்து, நீ இங்கேயே இருந்து வசிப்பாயப்பா! அதனால் எனக்குச் சந்தோஷமே யன்றிக் கவலை யில்லை. உன்னை எனக்குக் கடவுளே இப்போது துணை கூட்டினார். இல்லாவிட்டால் நான் இன்றே வேற்றூருக்குப் புறப்பட்டுப் போக எண்ணினேன்" என்று அளவற்ற ஆனந்தத்துடன் கூறினான்.

ஞானவர்மன் அன்று முதல் அங்கேயே தங்கி வசித்துப் புண்களை ஆற்றிக்கொண்டான். பிறகு அவனும், ஆண்டியப்பனும் வேற்றூர் புகுந்து வசித்து, ஆற்றுக்குச் சென்று மீன்களைப் பிடிப்பதும், விற்பது

மாக இருந்து வந்தார்கள். ஆயினும் இளைஞன் தனித்திருக்கும் நேரங்களில் "என்னை கடவுட்டிறம், அரசகுமாரனை என்னை அடிமை மகனாகக் காணவும், அவர் அருள் போலும்! குடைநிழலி லிருந்து குஞ்சர மூர்ந்தோர் நடைமேலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர் என்பதும், சிறப்புஞ் செல்வமும் பெருமையு முடையோர் அறக்கூழ் சாலை அடையினும் அடைவர் என்பதும்,உடமையும் வறுமையும் ஒருவழி நில்லா என்பதும் என்கண்முன் காட்சி யளிக்கின்றனவே" என்று எண்ணி வருந்துவதுண்டு.

ஞானவர்மனை வலைஞர்கள் சிங்கக்குட்டி என்று அழைப்பது வழக்கம். அது அவனுடைய செயல்களால் இடப்பெற்ற பெயராக விளங்கிற்று. ஒரு நாள் சிங்கக்குட்டி என்பவன் ஆற்றிற்குச் சென்று, தனியாக நின்று மீன் பிடித்துக் கொண்டிருந்தான். அவன் தூண்டியில் மீன் சிக்குண்டதாக அவனுணர்ந்து, தூண்டியை இழுத்தான். அதில் ஒரு சிறிய இருப்புச் சங்கிலியின் வளையம் ஒன்று மாட்டிக்கொண் டிருந்தது. அதை அவன் கையிலெடுக்க, அது ஒன்றன்பின் ஒன்றாகக் கோக்கப்பட்ட நீளச் சங்கிலியின் ஒரு முனை என்று உணர்ந்தான். உடனே அதைஅவன்மெதுவாக இழுக்க, அதன் மற்றொரு முனையில் ஒரு பெரிய இருப்புக் குடம் பிணிக்கப்பட்டு மேல் வந்தது. அக்குடத்தைச் சிங்குக்குட்டி கரைக்குக் கொண்டுவந்து, அதன் வாய்க்கு மூடியிருந்த மேல்மூடியைத் திறந்தான். அதன்

உள்ளே பொன் நாணயங்கள் நிறைந்திருப்தைக் கண்டான். அவன் அப்பொருள் ஆண்டியப்பனுக்கு உதவியாகும் என்று எண்ணிக்கொண்டு, குடத்துப் பொருளுடன் வீடடைந்தான். ஆண்டியப்பன் அப்பணத்தைக் கண்டு ஆனந்தங்கொண்டு, அன்று முதல் பணக்காரனுகத் துலங்கி, மேன்மேலும் தன்னைச் சார்ந்தோரை ஆதரித்து வருவானுயினன்.

ஆண்டியப்பன் கையிற் கிடைத்த பொருளானது எல்லோர்க்கு முபகாரமாக இருந்து, தான் சிறிய தாயினும் தக்கார்கைப் பட்ட பொருள் வான் சிறிதாக்குவது போல, மேலும் மேலும் பெருகத் தொடங்கிற்று

ஞானவர்மனுகிய சிங்கக்குட்டி, தன் மனை எய்திய காலத்திலிருந்து பேறும், புகழும், பெரு வாழ்வும், திருவும், வாழ்நாளும் பெற்று, இணையற்ற மகிழ்ச்சியுடன் வாழ்ந்திருந்தான் வலைஞன். அறத்திடு பிச்சைக் கூவி இரப்போர் அரசரோ டிருந்தர சாளினு மாளுவர் என்று அதிவீரராமபாண்டியர் கூறிய பொன்னன்ன வாக்கிற் கிணங்க,ஏழ்மையுற்று ஏங்கி யிருந்த வலைஞன், கடவுள் அருள் கைகூடச் செல்வம் பெற்றுச் சிறப்புற்றது, எங்குங் நிறைந்த ஈசன் திருவிளை யாடலின் பெருமையை அல்லவோ விளக்கிக் காட்டுகின்றது. அத்தகைய ஈசன் அடிகளை நாம் என்றும் மறவாது ஏத்திப் போற்றுவோமாக.

## 8-ஆம் அத்தியாயம்

### தனமணி

மாளவத்தில் ஓடிக்கொண்டிருந்த மாலிநதியின் தென் கரையில் அழகிய பூந்தோட்டம் ஒன்று இருந்தது. அதில் வாழை, தென்னை, மா, மாதுளை, கொய்யா, நெல்லி, நார்த்தை, எலுமிச்சை, முந்திரி, முதலிய கனிமரங்களும்; மூங்கில், பிரம்பு, காறை, இருமலி, களா, முதலிய முள்ளறைகளை யுடையனவும்; வேம்பு, ஆத்தி. இலுப்பை, வேங்கை, தேக்கு, மந்தாரை, முதலிய மரங்களும், தாழை, செண்பகம், மல்லிகை, முல்லை, ரோஜா, இருவாட்சி, முதலிய புஷ்பச் செடிகளும் நிறைந்திருந்தன.

குருகு, தாரா, சம்புள், முதலான நீர்வாழ் பறவைகளும் ; கிளி, மயில், குயில், காகம், ஆந்தை, வல்லூறு, இராசாளி, முதலிய நிலம் வாழ் பறவைகளும் அப்பூந் தோட்டத்தில் ஆங்காங்கு உலவிக்கொண் டிருந்தன. அதனுள் பெரிய மண்டபம் ஒன்று அலங்கார முடையதாய் விளங்கிக்கொண் டிருந்தது. அதன் கீழ்ப் பகுதி வெண்ணிறமுடைய கண்ணாடி போன்ற கற்களால் தளவரிசை செய்யப்பட் டிருந்தது. அந்தக் கற்களின்மீது அழகும், பொலிவும் நிறைந்த பெண் ஒருத்தி அமர்ந்திருந்தாள். அவளைச் சூழ்ந்தாப்போல்

பல பெண்கள் கைகளில் புஷ்பங்களால் சித்திரிக்கப் பெற்ற பலவிதமான மாலைகளையும், பந்துகளையும் கொண்டு விளங்கினார்கள். அவர்கள் தங்களுக்குள் கீழ்வருமாறு பேசிக்கொண் டிருந்தார்கள்.

லீலாவதி:—மேகவேணி! இன்றைக்கென்ன நம் அரசகுமாரி ஏதோ ஒருவாறு புலப்படுகின்றாள்.

மேகவேணி:—ஒருவாறு என்றால் எனக்கு ஒன்றும் தெரியவில்லை. நீ அவளிடம் என்ன விசேஷங் கண்டாய்?

லீலாவதி:—சந்தோஷம் என்பதே அவள் முகத்தில் காணவில்லை; அது தான் விசேடம்.

மங்களம்:—அதற்குக் காரணம் எனக்குத் தெரியும்?

கிருஷ்ணவேணி:—என்ன! என்ன! அதனை எங்களுக்குச் சொல்லக் கூடாதா.

மங்களம்:—அமரபுஜங்கர் தனமணிக்குக் கலியாணம் செய்யவேண்டும் என்று பேசிக்கொண் டிருந்தார். அவர் அந்தக் காரியத்தை இன்றே செய்ய வில்லையே என்பதுதான் அவளுக்குக் கோபம்.

அவ்வாறு அவர்கள் பேசியதைக் கேட்டதும் நடுவில் உட்கார்ந்திருந்த பெண் மங்களத்தைத் தாடையில் ஒரு அடி கொடுத்து "உனக்கு என்ன, எப்போதும் இதுவே விளையாட்டா! மற்றொரு முறை நீ இவ்வாறு என்னைப் பரிகாசம் செய்தல், நான் உன்னோடு சேர்ந்து விளையாட மாட்டேன்" என்று கூறினாள். அந்தச்

சமயத்தில் மற்றப் பெண்கள் யாவரும் தத்தம் கைகளி லிருந்த மாலைகளை அவன் கழுத்தில் சூட்டிக் கை கொட்டி நகைத்துக்கொண்டு, அவளைச் சுற்றிச் சுற்றி வந்து ஆடத் தொடங்கினார்கள்.

தனமணி அவர்களிடத்திலிருந்தும் தப்பித்துக் கொண்டு,மண்டபம் விட்டிறங்கிப் பூந்தோட்டத்திற்குள் விரைந்து நடக்கலானாள். மற்றப் பெண்களும் அவ ளைப் பின்தொடர்ந்து சென்றார்கள். அவர்கள் அரச குமாரியைத் தொடர, அவள் மறைந்து மறைந்து செல் லவும், அது அவர்களுக்கொரு விளையாட்டாகவே சிறிது நேரம் கழிந்தது. மாலை நேரம் குறுகியதனால் தனமணியும், மற்றப் பெண்களும் ஒன்று கூடி அரண் மனையை நோக்கி நடக்கலானார்கள்.

தனமணி சங்கமபுரி என்னும் நகரை யாண்ட அமரபுஜங்கனுடைய மகள். அவள் கல்வி, கேள்வி களிற் சிறந்தவள். அவளுக்கு மணப்பருவம் சமீ பித்திருந்தது. அது விஷயம் சுற்றுப் புறங்களிலுள்ள யாவரும் அறிவர். இராஜவர்மனுக்கும், மந்தவர்மனுக் கும் அந்த விஷயம் தெரிந்து இருந்தது. இராஜவர்மன் தனமணியை மணந்து கொள்ள வேண்டும் என்று கருதி யிருந்தான். மன்னர்கள் மணம் புரிந்துகொள்ள வேண் டுமானால் பெரும்பாலும் மணமகளும், மணமகனுமா கவே முதலில் சந்தித்து, ஒருவர் குணத்தை ஒருவர் உணர்ந்துகொண்டு, பின்னர் மணந்து கொள்வது வழக் கம்.

இக்காலத்தில் எவ்வளவுபேர் பொருளாசையா லும், வேறு காரணங்களாலும், மூடத்தனத்தாலும் தாய் தந்தையர்கள் எவ்வகையிலும் ஒற்றுமையில் லாத கணவனைத் தம் பெண்ணுக்குத் தாமே தேடி மணம் புரிவிப்பதும், அதேபோல் சிறிதும் பயனில்லா அறிவுடைய மணமகளைத் தேடி அறிவுடைய மகனுக்கு முடித்து வைப்பதும், வாழ் நாட்களில் அத்தன்மை யோர்கள் பாம்பும், கீரியும்; எலியும், பூனையும் ; இராஜா ளியும், புறுவுமாக இருந்து அல்லல் படுவதையும் கண் கூடாகப் பார்க்கின்றோம். அறிவு இல்லாத தாய் தந் தையர்கள் இவ்வாறு செய்து பிற்காலத்தவரை அவ திக்கு ஆளாக்கிப் பழியையும், பாவத்தையும் மூட்டை கட்டிக்கொள்ளத் துணையாகின்றார்களெனின், அறிவு டையோம் என்று கூறித் திரியும் கயவர்களும் இச்செ ய்கைகளைச் சிறிதும் ஊன்றிப் பாராமல், பொருள் காரணமாகக் கொள்கின்றார்கள். அவர்களின் நுட்ப அறிவைக் கண்டு யார்தான் நகையாடார்.

அமரபுஜங்கனுக்குத் தன்போன்ற அரசனுக்குத் தனமணியை மணம் புரிவிக்க வேண்டும் என்ற எண்ண மிருந்தது. ஆனால் அவன் தகுந்த மணமகனைத் தேடியே மணம் முடிக்க வேண்டும் என்று, எங்குந் தேடிக்கொண் டிருந்தான். அதனால் மணவினைக்குச் சிறிது காலம் நீடித்து வந்தது.

மேற்கூறிய விஷயங்கள் இராஜவர்மனுக்குத் தெரி யும், அதனால் அவன் தனியே சென்று தனமணி

யோடு மொழியாட வேண்டுமென்று எண்ணி யிருந் தான். அப்படியே ஒரு நாள் மாலையில் அவன் புறப் பட்டுச் சங்கம புரியை அடைந்து, பூந்தோட்டத்தில் சென்று பார்த்தான். அதே தருணத்தில் தனமணி அவளுடைய தோழிகளுடன் அரண்மனையை நோக்கி நடந்துகொண் டிருப்பதைக் கண்டான். உடனே அவன் அவள் செல்லும் வழியின் ஒரு புறத்தில் சென்று மறைந்திருந்தான்.

தனமணி தன் தாதியருடன் இராஜவர்மன் மறை ந்திருந்த புதலின் வழியைக் கடந்தாள். அச்சமயத் தில் அவன் தனமணியின் எதிரில் பொட்டெனத் தோன்றி நின்று, நகை முகங் காட்டினன். தனமணி திடீரென முன்னின்றவனை நோக்கி "ஆடவனே! நீ எங் கிருப்பவன்? இங்கு வரக் காரணம் என்ன" என்று கேட்டாள். அப்போது அரச குமாரன் "அரசியே! யான் மாளவதேயத்து அரசன். என்பெயர் இராஜ வர்மன் என்பது. உன்னை மணம் புரிய வேண்டும் என்ற எண்ணம் எனக்கு உண்டு. அது கருதியே உன்னைக் கண்டு பேசிச் செல்ல வந்தேன்" என்றான். அந்த மொழிகள் தனமணியின் இரு காதுகளிலும் எஃகை உருக்கி ஊற்றினப் போலும் பட, அவள் இராஜவர்மனை நோக்கி "மாளவ அரசனே! உன் குணங்கள் நன்கு விளங்குகின்றன. என் தந்தையார் இருக்க அவரிடம் நீ சென்று யாதும் வினவாமல் என்னிடம் நேரேவந்த திறம் வெகு நன்று. அதிலும் நும்போன்ற இழிகுண

வாளர்கள் அரசராயினும், அன்னவர்களை மணக்க எந்தக் குணமுள்ள மங்கை விரும்புவாள்! மன்ன நீ இனி இங்கு நில்லாமல் செல்வது தகுதியாகும். இதுவே என்னை நீ நாடி வந்ததின் விடையாகும்'' எனக் கூறினுள்.

தனமணியின் உரைகேட்ட அரச குமாரன் அவள் உரைகளின் பொருளை உணராது, மேன் மேலும் மணத்தைப்பற்றி அவளுடன் பேசி, அருகில் நெருங்கலானுன். அது கண்ட தனமணி சீற்றங் கொண்டவளாகி அவனைப் பலவகையினுல் அவமதித்துத் தூற்ற, அவன் வெட்கங்கொண்டு வெளியேறிச் சென்றுன்.

மன்னன் மகள் தோழியருடன் அரண்மனையை அடைந்து, மனவருத்தத்துடன் அன்றிரவைக் கழிக்கத் தொடங்கினுள். தோழியர்களுள் மங்களம் என்பவள் ஒருத்தி தவிற, மற்றவர்கள் எல்லாரும் வேறு தொழிலை மேற்கொண்டவர்களாகித் தனித் தனியே பிரிந்து சென்றுர்கள். தனமணியும் மங்களமும் தனித்தவர்களாக ஒரு அறையின்கண் அமர்ந்திருந்தார்கள், அவர்கள் தோட்டத்தில் நடந்த விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண் டிருந்தார்கள்! அச்சமயத்தில் தனமணிக்கு மனத்தில் ஒருவிதமான கிளர்ச்சி பொங்க, அவள் மங்களத்தைப் பார்த்து, 'தோழி! நான் சிறந்த அரசனை யன்றி வேறு எப்படிப் பட்டவரையும் மணம் புரிந்து கொள்ளேன்' என்று பெருமையாகக் கூறி இறுமாந்திருந்தாள்.

அகத்தில் பெருமிதம் கொண்டவரைக் கடவுள் எவ்வகையிலும் தண்டிப்பது உண்மை அல்லவோ? தனமணி ஆடவனொருவனை அவமதித்தோம் என்று கருவங்கொண்டவள் என அவள் மொழிகளால் வெளிப்பட்ட அக்கணமே,அவள் மயக்கமாகித் தூங்கலானாள். அத் தூக்கத்தில் அவளுக்கு எதிரே ஒரு ஆடவன் நிற்பதைக் கண்டாள். அந்த ஆடவன் இழிந்த குலத்தினனாகவும், தாழ்ந்த உடைகளை அணிந்தவனாகவும், சிறுகுடி மகனாகவும், காணப்பட்டான். அவன் பக்கத்தில் சடை முடி நரைத்த முனிவர் ஒருவர் நின்றிருந்தார். அவர் கையில் தண்டு, கமண்டலம், உருத்திராக்க மாலை இருந்தன. அவர் வாய் ஏதோ கூறிக்கொண்டிருந்தது. அந்தக் கோலத்தைக் கண்டு தனமணி என்பவள் சிறிது அச்சுற்றுப் பாவை போன்றிருந்தாள்.

தனமணியின் எதிரில் நின்ற முனிவர் அவளை நோக்கி "அரசகுமாரி! நீ யாதும் யோசிக்க வேண்டியதில்லை. இதோ நிற்கின்றானே! இந்த வலைஞனையே நீ இன்னும் சில மாதங்களில் மணம் புரிந்து கொள்ளுவாய்; இவனே உன் கணவன், நீயே அவன் மனைவி" என்று கூறினார்.

தனமணி அவருடைய மொழிகளைக் கேட்டு மனம் கொதித்து,அவரைத் தூஷிக்கத்தொடங்கினபொழுது, திடீரென அவர்களிருவரும் மறைந்தார்கள். அது கண்ட மங்கை அச்சங் கொண்டு திகைத்துப் பின் ஒன்றும் தோன்றப் பெறுமல் சிறிது நேரம் கழித்தாள்.

பின்னர் அவள் தூக்க மயக்கினின்றும் திடீரென்று விழித்துக் கண் முன் தோன்றியவைகளைப் பற்றி மங்கள த்தை வினவ, அவள் "யான் ஒன்றும் காணப்பெற வில்லையே, நீ ஏதோ மனம் போனவாறு நினைத்துப் பிதற்றுகின்றாய்ப் போலும்! அவ்விதமாக ஒன்றும் நீ மனத்தில் எண்ணாதே! அன்றியும் குற்றம் சிறிது கொண்ட நல்லவர்களைக் கடவுள் ஏதேனும் ஒரு வழியில் கண்டித்துத் திருத்துவது இயல்பு. அவ்வாறே அத்தோற்றம் உனக்குக் கடவுளால் உண்டாகி யிருக்கலாம். ஆதலால் நீ இனி யாதும் மனத்துள் நினையாமல் படுத்து உறங்குவது நலமாகும்," என்று கூறினாள்.

தனமணி மங்களத்தின் உரைகளில் நம்பிக்கை இல்லாமல் அவள் மனத்துள் தோன்றியபடி யெல்லாம் யோசிப்பதும், சொல்லுவதும், கோபிப்பதும், ஆத்திரப்படுவதும், "என்னை இழிஞன்—வலைஞன் மணந்து கொள்வான் என்று முனிவன் ஒருவன் கூறினனே. அது எப்படி முடியும்? அரச குமாரியை,அவன்—,ஒன்றுக்கும் உதவாத மூடன்—,புலை நாற்றம் வீசும் உடலன், அவனா என்னை மணப்பது! அது எவ்வகையினும் முரணான காரியம் அன்றோ! இவ்வகை நேராதவாறு இன்று முதல் நான் தகுந்த வழி கண்பிடித்து அதனைக் கையாளுகிறேன்" என்று பல பல நினைத்து மனந் துடித்துக்கொண் டிருந்தாள். அவளுடைய மனத் துடிப்புச் சிறிதும் அடங்கவில்லை. எண்ணறக் கற்று

எழுத்தற வாசிப்பினும் பெண்புத்தி யென்பது பேறும் பேதமைத்தே என்றவாறு அவள் கொஞ்சமும் ஆராயாமல், உடனே அவளுடைய தந்தையினிடம் சென்றாள்.

அமரபுஜங்கன் மகளின் வரவையும் அவளுடைய மனத்துடிப்பையுங் கண்டு 'அருமைக் குழந்தாய்! உனக்கு என்ன நேர்ந்தது, நீ இத்தருணம் என்னிடம் வரநேர்ந்த காரணம் யாது?' என்று வினவினான். அது கேட்ட தனமணி தனக்கு நேர்ந்த விஷயங்களையும், கனவையும் நன்றாக விளக்கிக் கூறினாள்.

அது கேட்டு அரசன் ஆலோசித்து மகளைப் பார்த்து, உன் கருத்தென்ன அதனைத் தெரிவிப்பாய் எனவும், அவள் "தந்தையே! என்னை மணமுடிப்பானென்ற வலைஞனை இன்றே நீர் கொல்ல வேண்டும். இல்லையேல் யான் உயிர் வாழேன்" என்று கடுகடுப்பாகக் கூறினாள். அவள் மொழிகேட்ட மன்னன் அவளைத் தேற்றி, 'உன் மனமே போல் நாளை செய்கிறேன். நீ சென்று துயில்வாயாக' என்று சாந்தமாகக் கூறி அனுப்பினான். எல்லாரும் தத்த மிருப்பிடம் சென்று உறங்கலானார்கள். தனமணி சென்று படுக்கையில் கிடந்த வண்ணமாக வெகு நேரம் புரண்டுகொண்டே இருந்தாள். தூக்கம் என்பது அவளை அணுகாமல் தூரத்திலேயே நின்றது.

கோபம், மதம், வஞ்சம் முதலிய குணங்களாகிய மாந்தர் குடிகொண்டு வாழும் வீடாகிய உடல்களில்

இளைப்பாறுதல் என்கிற தூக்கம் குடிபுகுந்து வாழுவ தில்லை. அவைகள் கொஞ்சங் கொஞ்சமாகக் கால் வாங்கின பிறகே, அது சிறிது சிறிதாக நடந்து அவ்வி டத்தை யடையும். தனமணியின் உடலிலும் மேற் கூறிய துன்பப் பொருள்களின் வாசம் ஏற்பட்டிருந்ததனால், தூக்கம் என்கிற மனிதன் அவ்வீட்டில் குடி புகாமல் விலகி யிருந்து, வெகு நேரம் பொறுத்தே உள் புகத் தொடங்கினான். தனமணி இரவு இரண்டு மணிக்குப் பிறகே தூங்கத் தொடங்கினாள். உலகமே அப்போது தூங்கியது.

## 9-ஆம் அத்தியாயம்

### நல்லார்-துணை நன்மைதரும்

ஞானநெறி யாளர்க்கு மோட்சத்தி லேநினைவு
நல்லறி வுளோர் தமக்கு
நாடோறுந் தருமத்தி லேநினைவு மன்னர்க்கு
ராச்சியந் தன்னில் நினைவு
ஆனகா முகருக்கு மாதர்மே லேநினைவு
அஞ்சாத திருடருக்கு
அனுதினங் களவிலே நினைவுதன வணிகருக்கு
ஆதாய மீதுநினைவு
தானமிது குடியாள ருக்கெலாம் வேளாண்மை
தனில் நினைவு கற்பவர்க்குத்
தருகல்வி மேல்நினைவு வேசியர்க் கினியபொருள்
தருவோர்கள் மீதுநினைவு
மானபர னுக்குமரி யாதைமேல் நினைவு எற்கு
மாறுதுன் மீதுநினைவு
மயிலேறி விளையாடு குகனே! புல்வயல் நீடு
மலைமேவு குமரேசனே

—குருபாத தாசர்

உலகத்தில்ற் றற்று, சிறந்த அறிவாகிய ஞானத்தைக் கொண்டு வாழ்கின்றவர்கள், எப்போது நமக்கு இணையற்ற பதவி கைகூடும் என்று கருதி இருப்பார்கள். அவர்களினும் ஒரு படி தாழ்ந்த

அறிவுடையவர்கள், சீரிய அறிவின் வழியையே கருதி நாளும் பற்பல தான தருமங்களைப் புரிந்துகொண்டிருப்பார்கள். அரசனானவன் அவனுடைய தேசத்திற்கு யாதொரு வகையிலும் துன்பம் நேராவாறு பார்த்துக் கொள்வதிலேயே கண்ணுங் கருத்துமாக இருப்பான். அற்ப குணங்களைக் கைக்கொண்ட கசடர்கள், பெண்களே மோட்சம் எனக்கொண்டு உழலுவார்கள். பிறருடைய பொருளைக் கைப்பற்றுவதில் நினைவாக இருப்பார்கள் திருடர்கள். வியாபாரிகள், பிறர் பொருளும் தம்பொருளே யென மதித்து வாழுபவர்களாயினும், அவர்கள் நிதம் தமக்கு ஏதேனும் இலாபம் கிடைக்கவேண்டும் என்று எதிர்ப்பார்த்து வாழ்வார்கள். இருந்து ஓம்பி இல்வாழ்பவர்களாகிய வேளாளர்கள், பயிரிடுவதிலேயே கருத்துக் கொண்டு நாள் நாளும் உழைத்து வருவார்கள். கல்வியின்கண் விருப்புடையவர்கள் எல்லாரும் ஆசானை யடுத்துப் பாடங் கேட்டு, அதனை மனனஞ் செய்வதிலேயே ஆசை கொள்வார்கள்........................................

மானமே சான்றோர்க் கணி என்ற வாக்கியத்தைப் பின்பற்றி ஒழுகும் மாந்தர், தமக்கு எவ்வகையினும் அவமானம் நேராவாறு தம்மைத்தாம் காப்பாற்றிக் கொள்ளுவதிலேயே கருத்தூன்றி நிற்பர். பக்தி யுடையவர்கள் தாம் தாம் வழி படுகடவுளையே வணங்கி ஏத்துவார்கள்.

மாந்தர் பலரும் மேற்கூறியவாறு தத்தம் எண்

ணத்திற் பதிந்தவைகளையே கைக்கொண்டு வாழ்வது திண்ணம். அவ்வாறே யோகானந்தரிடம் சேர்ந்து வசித்த குணமணி என்பவளும், அம்முனிவர் மூலமாக உபதேசம் பெற்று, நாடோறும் வாசியைப் பழக்கி வந்தாள். அதாவது ரேசகம் என்பது ஒன்று. அது சுவாசத்தை மெதுவாக வெளியில் விடுதலாம். மாண வர்களே? நாம் ஓடி ஆடி விளையாடும் போது எவ்வளவு வேகமாக மூக்கினுல் மூச்சு விடுகிறோம். அதுவுமன் றிச் சிலர் வாயையும் திறந்து மூச்சை வெளிப்படுத்து கிறார்கள். மூச்சை அதிகம் செலவழித்தால் நமக்குப் பலக் குறைவு நேர்ந்து விடும், ஓடுவதனுல் கை கால்கள் அசைந்து பலமடைக்கின்றன. ஆனாலும் அந்தத் தன் மையினுல் அடைவது உடல் சில வழிகளில் வலுக்கக் கூடிய பலமேயன்றி உண்மைப் பலமல்ல. மூச்சை மெதுவாக வெளியில் விடுத்து, உள்ளுக்கும் அவவாறே இழுப்பதனுல் தான் உடல் கொஞ்சம் கொஞ்சமாகப் பலமடைந்து நீடித்து நிற்கும். அதனுல் நீண்ட ஆயுளும் உண்டாகும். மாணவர்களே ! நீர் சிறுவயதில் மேற் கண்ட வழியைக் கைப்பற்று விடினும், நீங்கள் வயது வந்த போது அந்த வழியைக் கைக்கொண்டால், அத னுல் சிறந்த பலனை அடையலாம் என்பது திண்ணம்.

மூச்சை உள்ளுக்கு இழுப்பதற்குப் பூரகம் என்று பெயர். உள்ளுக்கிழுத்த சுவாசத்தை வெளியே விடா மல் சுவாசாசயத்தில் நிறுத்தல் ஒருவிதமான பழக்க மாகும். அப்பழக்கம் இரத்தத்தை முழுதும் சுத்தம்

செய்வதுடன், நரம்புகளில் உள்ள குற்றங்களை நீக்கி அவைகளை வலிவு படுத்தும். அதற்குக் கும்பகம் என்று பெயர். அவ்வகைகளையே குணமணி நாள்தோறும் பழகத்தில் கொண்டுவந்தாள். அதனால் அவளுடைய உடல் நாள் செல்லச் செல்ல உறுதியடைந்தது. தவிரவும் அவள் உடல் அந்தப் பழக்கத்தினால் (கும்பகத்தினால்) பூமியை விட்டு மேலே எழுந்திருக்கவும் தொடங்கியது. மாணவர்களே! இது உங்களுக்கு விந்தையாக இல்லையா! அப்படி அதிகம் பழக்கப் பட்டால், அந்த உடல் ஆகாயத்தில் கிளம்பி சஞ்சரிக்கவும் தொடங்கும். அதற்குத் தான் ஆகாயகமனம் என்று பெயர். நம்மவர்களில் பலர் இந்த விநோதங்களை முன்காலத்தில் செய்திருந்தார்கள். செய்யப்படாமையாலே அவை இப்போது பலருக்குப் பொய்யாகத் தோன்றுகின்றன.

குணமணி ஆகாய கமனத்தில் நன்றாகப் பழகி இருந்தாள். அவள் தூரத்தில் நடைபெறும் விஷயங்களைக் கண்டறியும் சக்தியையும் பழகி இருந்தாள். அதனை ஒரு நாள் நன்றாக ஆராய்ந்தறிய வேண்டி குணமணி ஒரு புறம் சென்று அமர்ந்தாள். அங்கு அவள் கண்களை மூடிக்கொண்டு மாளவநாட்டின் அரசனைப் பற்றி ஆராயலானாள். அது போது அவளுக்கு ஒரு இரகசியம் தெரியவந்தது. அது என்னவென்றால், இராஜவர்மனும், மந்தவர்மனும் அவர்கள் தந்தையைக் கொலைபுரிய ஆலோசிக்கும் முன்னம், அரண்மனை வயித்

தியன் ஒருவனைத் தமக்கு வசமாக்கிக் கொண்டார்கள். பின்னர் அவனுடன் யோசித்து, அரசன் தேவவர்மனை விஷமிட்டுக் கொல்ல ஏற்பாடு செய்தனர்.

வயித்தியன் அஃதுணர்ந்து நெஞ்சம் நடுங்கி, தனித்து நின்று யோசிப்பானாகி, "ஐயோ அரசன் நற்குணவானாயிற்றே! அவனாலன்றோ குடிகள் செழிப்பாக வாழ்கின்றார்கள். அவன் எனக்கு எவ் விதத்திலும் நன்மையே செய்திருக்கிறானே! அப்படிப் பட்டவனையா நான் கொல்லுவது. அன்னமிட்ட வீட்டில் கன்னமிடலாமா? உப்பிட்டவரை உள்ளளவும் அன்றோ நினைக்கவேண்டும்! அன்றியும் யான் இம் மூடர்களின் மொழிக்கிணங்கி, அருமை அரசனைக் கொல்லத் துணிவேனாயின்.

வந்தநல் விருந்திருப்ப மனையினுற் றருந்து வானும்
பந்தியி லுணவுவேறு பண்ணுபா தகனுந் தாயும்
தந்தையும் உண, உண்ணாத சழக்கனும் உச்சிப்போதில்
நொந்தவர் தமைநோக்காமல் நுகர்ந்திடு கொடியன்
தானும்

நிந்தைசெ யுணவினானு நிருமலன் பூசையின்றி
வந்துண வருந்துவானு மறுத்தவூன் னுகர்விப்பானும்
தந்தநல் வினையாற் செல்வஞ் சார்ந்தவர் தம்மைக்கண்டு
சிந்தனை பொறாதழுங்கித் தீர்வினுள் மகிழ்வான்றானும்

முன்புகழ்ந் துரைத்துப்பின்னர் முறுவல்செய் திகழ்வா
ன்றானும்
தன்பெறுங் கிளைநல்கூர்ந்து தளர்வுற வாழ்கின்றானும்

அன்புகொண் டொருவன்வைத்த அரும்பொருள் கவர்கின்றானுந்
துன்புறுந் தொழில்செய்வித்துச் சொல்பொருளிலையென்பானும்

புண்ணியம் பிறர்பொருட்குப் புரிபவன் றானுமிந்த
மண்ணிடை யின்பத்திற்கா மறுமைசெய் தொழில்விடுங்கும்

தண்ணிய வறிவிலானுந் தவத்தரை யிகழ்கிற்பானும்
பண்ணிய வினையிலென்றும் பாவமே பயில்கின்றானும்

—பிரபுலிங்கலீலை

என்று பெரியார் கூறியுள்ள பாவங்களுள் மூழ்கி விடுவேனல்லவா! ஆதலால் நான் தேவவர்மனைக் கொல்லத் துணிவது கூடாது. அவ்வாறு யான் இணங்கேனாயின் இவ்வரச குமாரர்கள் என்னைக் கொலைபுரிய வழிதேடுவார்கள். இந்த ஆபத்தினின்றும் தப்பித்துக்கொள்ள இவர்களுடைய எண்ணத்திற்கு இசைந்தவனாகவே அபிநயித்து, அரசனைக் கொல்ல விஷம் கொடுப்பது போலவே, நெடுநாள் மயக்கத்தைத் தந்து, பிறகு உடலுக்கு வலிமையையும், தேகாரோக்கியத்தையும் ஊட்டும் மருந்தை இவர்கள் வசம் கொடுத்து ஏமாற்ற வேண்டும்” என்று நிச்சயித்துக் கொண்டான்.

அரண்மனை வயித்தியன் இராஜவர்மனிடம் சென்று மருந்து ஒன்றை அவன் கைத்தந்து, ‘இதனை நீர் அரசன் புண்களிலேனும், அல்லது நாசியின் வழியாகவேனும் முகரச் செய்வீராயின், உடனே அரசன்

மாண்டு விடுவான்' என்று சொன்னான். அம்மருந்தைக் கொண்டே இராஜவர்மன் அரசனை மயக்கமூட்டி அவன் மார்பில் பட்ட புண்ணிலும் தூவியதனால், அரசன் நீண்ட மயக்க முற்றான். அது சமயம் தேவ வர்மன் இறந்தானென்று யாவரும் எண்ணி அவனு டைய உடலை அடக்கம் செய்தார்கள்.

மேற்கண்ட வரலாறு குணமணிக்குத் தெரிய வந் ததும் அவள் யோகாநந்தரிடம் அவ்விஷயங்களைக் கூறி, அரசனைப் பிணவறையினின்று அப்புறப் படுத்திக் காப்பாற்ற வேண்டும் என்று வேண்டினாள். குற்ற மற்றவர்களைப் காப்பாற்றுவது உத்தம மக்களின் கட மையன்றோ? யோகாநந்தர் அன்றே புறப்பட்டு மாள வம் அடைந்து, பிணவறையைக் கண்டு பிடித்து, அங்கு பெட்டிக்குள்ளிருந்த தேவவர்மன் உடலை வெளிப் படுத்தி, அதனை அவரே சுமந்து கொண்டு ஒருவரும் அறியாவாறு தன்னிருப்பிடத்தை யடைந்தார். தேவ வர்மனின் உடல் அன்று முதல் யோகாநந்தருடைய மாளிகையில் குணமணியினால் காப்பாற்றப்பட்டு வந் தது. அவ்வுடல் சிலமாத காலங்கடந்தே சுவாசிக்கத் தொடங்கும் என்று அறிந்துகொண்ட யோகானந் தரும், குணமணியும் தாமாக ஒன்றும் அதனை எழுப்ப முயலாமல் இருந்து வந்தார்கள்.

இவ்வாறிருக்கும் நாளில் ஒரு நாள் குணமணி என்பவள் தன்னைக் காப்பாற்றிய ஞானவர்மனைப் பற்றி ஆராயத் தொடங்கி, ஒருபுற மமர்ந்து கண் மூடி

னவளா யிருந்தாள். அந்தச் சமயம் அவள் ஞானவர்மன் வலைஞனாகி யிருப்பதையும், அவனுக்கு அமரபுஜங்கனால் ஆபத்து நேரிடப் போவதையும், அவ்வாபத்தினின்றும் ஞானவர்மன் தப்பித்துக் கொள்ளுவானெனவும் உணர்ந்தாள். அதனால் அவள் அவனைப்பற்றிக் கவலை கொள்ளாமல், அரசனுடைலப் பாதுகாப்பதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்து வந்தாள்.

## 10-ஆம் அத்தியாயம்

### தெய்வச் செயல்

மாந்தர் சிறந்த ஒழுக்க முடையவர்களாக இருந்தாலும், ஒவ்வொருவரும், யாதேனும் ஒரு பாசத்தைக் கைக்கொண்டவர்கள் ஆகின்றார்கள். தாம் கொண்ட பற்றுக் கிணங்கக் காரியங்களைச் செய்யத் தலைப்பட்டு விடுகின்றனர். அவ்வாறு செய்யத் தொடங்கிய காரியத்தை நன்கு ஆராய்ந்து பார்ப்பதில்லை. எண்ணித் துணிக கருமம் துணிந்தபின், எண்ணுவம் என்பது இழுக்கு என்னும் உத்தர வேதத்தின் உண்மையை அன்னவர் எள்ளளவும் கருத்தி லிருத்துவதேயில்லை. அக்காலத்தில் அறிவுடையார் அவர்களை யணுகி நின்று, அவர்கள் கொண்ட காரியங்களால் விளையும் நன்மை தீமைகளை எடுத்துரைத்து அதனைப் புரிய வேண்டாம் என்று தடுப்பினும், அவ்வுரைகள் அவர்கள் செவிகளில் நுழைவதில்லை. தாம் பிடித்தது பிடிப்பென்று மேலவர் புத்தி தள்ளிச் செய்வோர் குரங்கு என்பதை அவர்கள் நிலைநாட்டத் தொடங்குகின்றனர். தனக்கு வெகுபுத்தி யுண்டாகினும் வேறொருவர் தம் புத்தி கேட்கவேண்டும் என்றபடி நடத்தல் நன்மை யன்றோ ! அதனை உணராமல் தீத்தொழிலைப் புரிந்தவர் பின்னால் கேடடைந்து கண் கெட்ட பிறகு

சூரிய நமஸ்காரம் செய்யத் தொடங்குவது போல் 'ஆ மதி கெட்டேனே! இனி இவ்வாறு யான் புரியேன்' என உரைகள் கூறத் தொடங்கினல் யாது பயன். அரைக் காசுக்குப் போன மானம் ஆயிரம் கோடீப்பினும் வருமோ?

அமரபுஜங்கன் கொலு முகத்து வீற்றிருந்தான். அவனுக்கு அருகில் குணவீரன் என்னும் தலைமை மந்திரியும், அவன் பக்கல் மற்ற மந்திரிகளும் அமர்ந்திருந்தார்கள். அமரபுஜங்கன் குணவீரனைப் பார்த்து "அமைச்சரே! இன்று முதல் நம்நகரிலும், நாட்டிலும் வலைஞர்கள் ஒருவரும் வசிக்கலாகாது. அவர்களை வெளியே ஓட்டி விடுவதற்குமுன் யான் ஒவ்வொரு செம்படவனையும் நேரிற் காணவேண்டும். இவ்விஷயம் நீர் உணர்வீராக! உடனே நகரெங்கும் இதனைத் தெரிவித்து வலைஞர்களை இன்றே என் முன் கொண்டுவரும்படிச் செய்யும்" என்று கட்டளை யிட்டான்.

அரசனுடைய கட்டளையைக் கேட்ட குணவீரன் எழுந்து நின்று, அரசனை வணங்கி "நீடூழிவாழ்க அரசரே! நம் நாட்டுக் குடிகளில் ஒரு பகுதியாராகிய வலைஞர்கள் நாட்டினின்றும் ஏன் வெளியேற வேண்டும்? அவர்கள் அவ்வாறு செல்ல எவ்விதக் குற்றமும் செய்திருப்பதாகத் தெரியவில்லையே, அன்றியும் அவர்கள் நம்மை விட்டு அகன்றால் நமக்கு வேண்டிய காலத்தில் கப்பல்களை ஓட்டவும், போர் தொடங்கும் காலங்களில் துணைபுரியவும், நகரங்களில், தொழில் புரியவும்,

கடலில் முத்து குளிக்கவும், மச்சம் முதலியவைகளைத் தேடித் தரவும் யாவருளர்? அன்றி நம் நகரத்தில் திருவிழாக்கள் நடைபெறுங்கால் வலைஞர்கள் உதவியின்றி எக்காரியமும் முடிவதில்லை என்பதையும் நீவிர் நன்கு அறிந்திருக்கின்றீர்கள் அல்லவா? அவ்வாறிருக்க ஒரு குற்றமுமில்லாத மக்களை ஊர் விட்டோட்டி விடுவதென்றால் நியாயமாகுமா? அவர்கள் வெளியேறின் வெளி நாட்டார் உம்மையன்றோ வெறுத்துக் 'கொடுங்கோன் மன்னன் போலும்! ஆகையினாற்றான் குடிகள் அங்கு வாழ விருப்பமில்லாமல் வெளிநாட்டிற் குடி புகுந்தனர்' என்று தூற்றத் தொடங்குவார்கள். அவ்வசைக்குத் தாம் ஆளாக எட்டுணையும் பொருந்தாதே? அரசே! இவ்விஷயத்தை ஆராய்ந்து செயல் நலம்" என்று கூறினான்.

அமரபுஜங்கன் குணவீரனுடைய மொழிகளைக் கேட்டு, "மந்திரியாரே? யான் காரணமின்றி ஒன்றையுங் கூறேன் என்பது நீர் அறிவீர்; அரச குடும்பத்திற் பிறந்தவர்கள் என்றும் அரசர்களையே உறவு கொண்டிருப்பார்களே யன்றி, ஏனையோரை உறவு கொள்ள மாட்டார்கள். ஒவ்வொருவனும் தான் கைக்கொண்ட தகைமையுடையோர்களையே நேசிப்பது உலக இயற்கை. அவ்வாறிருக்க அரச குடும்பத்திற் பிறந்தா ளொருத்தியை வலைஞன் ஒருவன் மணம் புரிந்தான் என்பது எவ்வளவு இழிவானது? என் மகள் தனமணியின் கனவில் முனிவர் ஒருவர் நின்று

அவருடன் நின்ற வலைஞன் ஒருவனைக் காட்டி 'நீ இந்த வலைஞனை மணம் புரிவாய்' என்று கூறிச் சென்றனராம். அவ்வார்த்தைகளைக் கேட்க எனக்கு மனம் வருந்துகிறது. அந்த வருத்தத்தை யொழித்துக் கொள்ளவே யான் உமக்கு இக்கட்டளை யிட்டேன். நீர் இதனை ஆராய்ந்து உடனே செய்யத் தொடங்குவீராக" என்று கூறினன்.

குணவீரன் அரசன் எண்ணத்தை யுணர்ந்து, அவனைப் பார்த்து "அரசரே! ஒரு குடும்பத்தின் நன்மைக்காக அக்குடும்பத்தில் குற்றங்கொண்ட ஒருவனை நீக்கி விடுதல் நலமாகும். ஒரு நகரத்தின் நன்மைக்காக ஒரு வீட்டை அழிப்பது நலமாகும். எவ்வாறெனில் தொத்துவியாதியாகிய பிளேக், முதலியன புகுந்து ஒரு வீட்டில் மக்களை மரணத்திற் குள்ளாக்கினல், அந்த வியாதி அவ்வூரில் மற்ற வீடுகளில் பரவி ஊரை நாசமாக்காவாறு, அந்த வீட்டை அப்புறப் படுத்திக் கொளுத்திவிடுவது வழக்கம். அவ்வாறு செய்யின் அந்த வியாதியால் அவ்வூர் நாசமாகாது. அதுபோல அரசகுடும்பம் இழிவை ஏற்றுக் கொள்ளாமல் இருக்கவேண்டுமானல், இழிவுக்குக் காரணமானவன் எவனே அவனை மாத்திரம் ஊரைவிட்டு விலகச் செய்வது சிறந்ததாகும்; அவ்வாறின்றி ஒருவனுக்காக நூற்றுக்கணக் கானவர்களைத் துன்புறுத்தல் வருந்தத்தக்கதாகும். அரசராகிய தாங்கள் கோபத்தினல் வாய் தவறிச் சொல்லியிருப்பினும்

இருக்கலாம், ஆதலால் தாங்கள் முன்னம் கூறிய விதியைத் தடுத்து விடுவது நலம் என்று யான் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று பணிவாகக் கூறினன்.

அமரபுஜங்கன் மந்திரி கூறிய மொழிகளை ஆராய்ந்து, அவையாவும் நியாய முடைத்தே எனத் தெளிந்து மந்திரியைப் பார்த்து "குணவீரரே! நீர் கூறுவன யாவும் பொருத்த முடைத்தே. ஆனல் நாம் அந்த ஆடவனை உணர்வது எங்ஙனம். அவனை யறிய வேண்டியாதுவது மற்றவர்களை இங்குக் கொண்டுவர வேண்டவா" என்று கேட்டான். மந்திரி அதற்கிசைந்து அவ்வாறே செய்வதாகச் சொல்லி, சில சேவகர்களை அழைத்து, "நீவிர் சென்று நம்நகரில் வாழும் வலைஞர்கள் யாவரையும் இன்று அரச சமுகம் வரவேண்டும் என்று கட்டளையிட்டு வாருங்கள்" எனப் பணித்து அனுப்பினன்.

சேவகர்கள் அவ்வாறே நகரிலுள்ள வலைஞர்களுக்கு அரசன் கட்டளையைத் தெரிவித்தார்கள். அக்கட்டளையைக் கேட்ட செம்படவர்கள் பயந்து நடுங்கிக்கொண்டு, ஒவ்வொருவரும் அரசன் சமுகத்தை அடைந்தனர். வலைஞர்கள் அரசனை அடைந்து தரிசிக்கும்போது, தனமணி அரசன் அருகிருந்த ஆதனத்தில் இருந்து கொண்டு வருகிறவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அமரபுஜங்கன் தன் சபையின் கண் வந்த வலைஞன் ஒவ்வொருவனிடமும் அவரவர்களுக்குத் தக்கவாறு

சில சில வார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்து, மக ளின் குறிப்பறிந்து அவர்களை வெளியே செல்ல விடை கொடுத்து வந்தான். இப்படிச் சிலநாள்கள் நடந்தன. கடைசி நாளின் முடிவில் கிழவனும், குமரனுமாக இரு வர் வலைஞர் அரசன் சமுகம் அடைந்து பணிந்து நின் றூர்கள். அவர்களுடைய தோற்றம் குறுநில மன்னர் களைப்போல் விளங்கியதே யன்றி, சாதாரண வலைஞர் களாகப் புலப்படவில்லை. அவர்களுடன் அரசன் பேசிக் கொண் டிருந்தான். தனமணி அங்கு நின்ற குமரனை வலைஞனை உற்று நோக்கினுள். நோக்கலும், அவள் முன் னெருநாள் தன் கனவில் முனிவனுடன் கண்ட ஆட வன் வடிவத்தை அந்த வலைஞனிடம் கண்டாள். அதனை அவள் தந்தைக்குத் தெரிவித்தாள்.

தனமணியின் குறிப்பை யுணாந்த அரசன் "அந்த வலைஞனை நோக்கி 'வலைஞனே நீ இன்றே என் நாட் டைவிட்டு நீங்கவேண்டும்' என்றான். பின்னர் வலைஞ னும், அரசனும் பின்வருமாறு பேசலாயினர்

வலைஞன்:—அரசரே! நான் தங்களுக்கு என்ன பிழை செய்தேன்? என்னை ஏன் ஊரைவிட்டு ஓட்டு கிறீர்?

அரசன்:—உன்னுல் என் அரசாட்சிக்கு இழிவு நேரிடும் என்று தெரிகிறது.

வலைஞன்:—அற்பனுகிய என்னுல் அரசுக்கு யாது கீழ்மை நேரிடும். அவ்வாறு நான் செய்வேனுயின் என்னை நீர் கொலை செய்து விடலாமே.

அரசன்:—என்மகளை நீ மணந்து கொள்வாய் என்று முனிவர் ஒருவர் என்மகள் கனவிற் றோன்றிக் கூறியிருக்கிறார். அது நடாவா வண்ணம் நீ வெளியே ஓடிவிட வேண்டும்.

வலைஞன்:— (சிரித்திக்கொண்டு) அரசரே! அவனன்றி யோரணுவு மசையாதேனும் பெரிய ஆப்தர் மொழியின்படி விதிப்பயன் கூட்டுவித்தால் அதனைத் தடுக்க யாவரால் முடியும்?

வலைஞன் அவ்வாறு கூறலும் அரசனுக்கு அப்போது சீற்றம் மேலிட, கண் சிவந்து உதடு துடிக்க வலைஞனை உற்று நோக்கி "இழிஞனே! சிறிதும் முன் பின் பாராமல் பேசுகின்றாயா! அரசன்முன் ஒருவன் இவ்வாறு தீரமாகக் கூற முயலுவானா! மடயனே. இதோ பார் உனக்குத் தகுந்தவாறு வெகுமதி தருகின்றேன்" எனக் கூறி, அங்கிருந்தவர்களை விளித்து, 'இவனை என் கண்முன் நெருப்பிலிட்டுக் கொளுத்தி விடும். அதன்பின் இவனுடைய மனத்துணிவும், முனிவர் மொழியும் எவ்வாறாகிறது என்று பார்க்கலாம். உடனே தீ மூட்டுங்கள்" என்று கடுகடுத்துக் கூறினான்.

அரசன் மொழிகளைக் கேட்டுச் சிலர் தீ மூட்ட விரைந்து சென்றனர். கிழ வலைஞன் துக்க மேற் கொண்டு பலபல கூறி, அரசனைப் பணிந்து 'என் மகனைக் கொல்லாமல் விடவேண்டும்' என்று வேண்டினான். அவன் மொழிகள் பயன் படா தென்று இளைஞன் உணர்ந்து, கிழவனைப் பார்த்து 'அப்பனே! நீ ஏன்

றுக்கும் பயப்படவேண்டாம். நான் இன்றே இறக்க வேண்டும் என்று இருந்தால் அது தவறி விடுமா! கடவுள் செயலை முடிவில் காண்போம். நீ வீணாக வருத்தப் படவேண்டாம். சற்றுச் சமாதான மனத்துடன் இருப் பாயாக. ஒருவனுக்கு ஆற்றிலும் சாவு நூற்றிலும் சாவு என்பது உண்மையல்லவா? இதற்காக நீ வருந்தாதே" என்று கூறிக் கிழவனைத் தேற்றினான்.

வெளியே சென்ற சேவகர்கள் சிறிது நேரத்திற் கெல்லாம் அரசன் முன் வந்து பணிந்து, 'அரசே தீ மூட்டிச் சித்த மாக்கினோம்' என்று கூறினர். உடனே அரசனும், அவன் மகளும், அவர்களைச் சார்ந்தோரும் பின் தொடரத் தீ இருக்குமிடம் நோக்கிச் சென்றார் கள். வலைஞர்களில் இளைஞான இரண்டு வேலைக்காரர் கள் காவல் காத்துக்கொண்டு செல்ல, அவர்களைப் பின் பற்றிக் கிழ வலைஞன் துக்கத்துடன் நடந்து சென்றான்.

அரண்மனைக்கு அடுத்தாப்போல் வெளி ஒன்று இருந்தது. அதன் நடுவில் சுமார் பத்தடி குறுக்களவும், பதினெட்டடி ஆழமு முள்ள கிணறு போன்ற பள்ளம் ஒன்று பழமையானதாக இருந்தது. அந்தப் பள்ளம் கிணறு எடுப்பதற்காக வெட்டி, அதில் தண்ணீர் கிடைக்க வில்லை என்று விட்டுவைத்த பள்ளம். அதி லேதான் சேவகர்கள் கட்டைகளை யடுக்கி, நெருப்புக் கொளுத்தி யிருந்தார்கள். நெருப்பு நன்றாய் மூண்டு எறிந்துகொண் டிருந்தனால், அக்கிணற்றின் அடியில் இருந்த கற்பாறை யொன்று கொஞ்சங் கொஞ்சமாகப்

பிளந்து கொண்டேயிருந்தது.

அரசன் பள்ளத்திற்குச் சிறிது தூரத்தில் சென்று நின்றான். மற்றவர்களும் அவனைச் சேர்ந்து சூழ்ந்து நின்றார்கள். இளைஞனாகிய வலைஞனைக் காத்துச் சென்றவர்கள் அவனைப் பள்ளத்தின் அருகில் நடத்திக் கொண்டு சென்று நிறுத்தினார்கள். இளைஞன் கைகூப்பிய வண்ணம் கடவுளைத் தொழுது "எங்கும் நிறைந்த ஈசனே! யான் ஒரு குற்றமும் செய்!தவனல்லேன். என்னிடம் குற்றமுளதாயின், நீ என்னை இத்தீக்கு இரையாக்கி விடும். இல்லையேல் என்னைத் தப்ப விடும்" என்று கூறிக்கொண்டே அந்தப் பள்ளத்தினுள் பாய்ந்தான்.

அவ்வாறு இளைஞன் பாய்ந்த மறுநிமிஷமே. அந்தப் பள்ளத்தின் மேல் மட்டத்தில் புகை நிரம்பியிருக்கவும், நான்கு பக்கங்களிலும், நீர்த் திவலைகள் சிதறி விழுவதை அங்குநின்றஅரசன் முதலானவர்கள் கண்டார்கள். ஐந்து நிமிஷங்களுக்குள் தீ மூண்டெரிந்த பள்ளம் நீர் நிறைந்து விட்டது. அந்தத் தண்ணீரினின்றும் இளைஞன் நீந்திக் கரையேறி, அரசன் முன் சென்று நின்றான். அவனைக் கண்ட அமரபுஜங்கன் மனத்தில் திகில் கொண்டு 'என்ன விந்தை! நெருப்பை யான் நேரிற் கண்டேன். அடுத்த நிமிஷமே அது தண்ணீராக மாறியதே! இவன் கடவுளே போலும்! அல்லாக்கால் இவனுடைய உண்மை ஒழுக்கமே இவனை இவ்வாறு தப்புவித்தது போலும்! என்று நினைத்துக்

கொண்டு அவனைப் பார்த்து, 'இளைஞனே! உன்னி டத்து எனக்கு ஒரு விதமான அன்பு மிகுகின்றது. யான் ஏதோ ஒன்று நினைக்க, அது எனக்கு முடிவில் நல்லறிவையே ஊட்டிற்று. என் பிழைக்காக நீ மனம் வருந்தாமல், சுகமாகச் சென்று வசிப்பாய்' என மொழிந்து அவனை அனுப்பி விட்டான். கிழ வலைஞன் நடந்தன யாவுங்கண்டு, அளவிலா ஆனந்தக் கடலில் மூழ்கி, அரசனைப் பணிந்து இளைஞனுடன் வீடு சேர்ந் தான்.

வலைஞர்கள் அகன்றபின் மன்னன் மகளை நோக்கி "மகளே! நீ ஒன்றுக்கும் வருந்தவேண்டு வதில்லை. வருவது வந்தே தீரும் என்றபடி எண்ணி யிருக்காமல், நாம் ஒன்று தொடங்கினால், அது பிள்ளை யார் பிடிக்கக் குரங்காய் முடிவது போலாகின்றது. ஆகையால் இனி மணத்திற்கு ஏற்பன தெரிந்து கொள் வதே நலம். நீ கூடிய சீக்கிரம் ஒரு அரசனையடைய யான் முயற்சிக்கிறேன்." என்று கூறி அரண்மனை புகுந்தான்.

மாணவர்களே! நெருப்புப் பள்ளம் நீர் நிறைந் தது ஆச்சரியம் அல்லவா? பள்ளத்தின் அடியில் பாறை ஒன்று பிளவு பட்டுக்கொண்டே வந்தது என்று முன் அறிந்தோம் அல்லவா? அந்தப் பாறை முழுவ தும் வெடித்துப் பல துளைகளை உண்டாக்கியது. அந் தத் துளைகளின் வழியாகப் பூமியில் பாறையின்கீழ் எந்தப் புறமும் செல்ல இடமில்லாமல் தங்கி, மேன்

மேலும் வரும் தண்ணீரின் வழியையே அடைத்து இருந்த நீரானது வெளிக் கிளம்பி, அங்கு எரிந்து கொண்டிருந்த நெறுப்பை அவித்து விட்டது. வலே ஞன் கடவுளைத் தூதித்துக்கொண் டிருக்கும்போதே நெருப்பு அணைந்து, அதனல் புகைமாத்திரம் அதிக மாக மேலே கிளம்பிக்கொண் டிருந்தது. புகை முழு வதும் கிணற்றின் மேல் பாகத்தில் செல்லும்படித் தண் ணீர் வெகு வேகமாகக் கிணற்றை நிரப்பிக் கொண் டிருந்த சமயத்தில் தான் இளைஞன் கிணற்றுக்குள் விழுந்தான். அவன் தண்ணீரில் விழுந்தானே யன்றி, நெருப்பானது அவனைச் சிறிதும் சுட அங்கு இல்லை. அதுவும் கடவுள் செயலே. குற்றமற்றவரைக் காப்பது கடவுளின் பாரம் அல்லவா ?

கிணற்றின் மேலே மூடியிருந்த புகையினல் அந்த விஷயத்தை ஒருவரும் உணர முடியாதவர்களானர் கள். அரசனும் அறிவு பெற்றான். இல்லையேல் அவ னும் குற்றமுடையானவானன்றே! ஒருவன் தெரியாமல் குற்றம் செய்யத் தொடங்கினலும், அவனைக் கடவுள் பல வழிகளில் காப்பாற்றுகின்றார் என்பது இவ்விடத் தில் நன்றாக விளங்குகிற தல்லவா? மாணவரே! மனத்தால் உணர்ந்து ஒருவன் குற்றம் செய்தால், அவன் உடனே தண்டிக்கப்படுவான் என்பதையும் நீங்கள் மறக்க வேண்டாம்.

## 11-ஆம் அத்தியாயம்

### விதி வலிது

கொடுமதி கண்ணுக்குத் தோன்றுது என்று வாறு, தனமணி என்பவள் யாவும் நேரிற் கண்டிருந்தும், தந்தையின் உரைகளை மனத்திலேற்றுக் கொள்ளாமல், வஞ்சம் பொருந்திய உள்ளத்தோடே நாள் சில கழித்தாள். மனத்திற் பகை தோன்றின் அதனை அப்போதே வெளிப் படுத்தாது மூடிவைத்தால் அது முற்றிப் பெரிதாகி விடுவது இயல்பு. தனமணி யும் சின்னுள் வறிது கழித்தாளேனும், அவள் வலை ஞனை எவ்வகையிலேனும் கொன்றுவிட வேண்டும் என்றே தீர்மானங் கொண்டிருந்தாள். அந்தக் காரி யத்தை முடிக்கத் தக்க துணைவர்களைத் தேடவும் தொடங்கினுள்.

ஒருநாள் தனமணி அவளுடைய தோழி ஒருத் தியை அழைத்து "என்னுயிர்த்தோழீ! என் நினைவை நீ நன்கு அறிவாயல்லவா. அதனைச் செய்து முடிக் கத் தக்க வழி ஒன்று கண்டுபிடிக்க வேண்டுமே. உனக்கு ஏதேனும் சூழ்ச்சி தோன்றினுல் கூறுவாயாக" என்று கேட்டாள். அரச குமாரியின் கருத்தை முன் னரே யுணர்ந்திருந்த அம்மாது தனமணியைப் பார்த்து 'என்னருந் தலைவியே! வேறு எந்த வகையிலும் நாம்

வலேஞனைக் கொல்ல ஏலாது. அவனை மருந்திட்டுக் கொல்லுவதே தகுந்த சூழ்ச்சியாகும். அதற்கு வேண்டிய முயற்சியை நாம் எளிதில் கைக்கொள்ள முடியும். நம் நகருக்குச் சிறிது தூரத்தில் சிறந்த மந்திரவாதியும் வயித்தியத்தில் கைதேர்ந்தவனுமான ஒருவன் வசிக்கின்றான். அவனிடம் நாம் சென்று காரியத்தை முடித்துக் கொள்வதுதான் தகுந்த வழி. அதைத் தவிர்த்து வேறு வகையில் நாம் வலேஞனைப் போக்க முயலுதல் முடியாத காரியமாகும். இதுவே என் சூழ்ச்சி" என்று சொன்னாள்.

தோழியின் மொழிகளைக் கேட்டு அவ்வண்ணமே நடப்பதாக உறுதி செய்துகொண்டாள். தனமணியும், தோழியும் அன்றிரவே இருவருமாக புறப்பட்டுச் செல்ல முடிவு செய்து கொண்டார்கள்.

இரவு பத்துமணி இருக்கும். ஊர் எங்கும் சத்தம் அடங்கி இருந்தது. அத்தோற்றம் துஷ்டர்களைக் கண்டு பிடித்துத் தண்டிக்கும் சீலர்கள் மோனமுற்று வழி மேல் விழி வைத்துப் பார்த்துக் கொண்டிருப்பது போன்றிருந்தது. சந்திரன் மேகங்களால் மறைக்கப்பட்டிருந்ததனால் எங்கும் இருளே சூழ்ந்திருந்தது. அந்தச் சமயத்தில் உடல் முழுமையும் கருப்புத் துணியால் மூடப்பட்ட இரண்டு உருவங்கள் மறைந்து, மறைந்து ஊரினின்றும் வெளிப்பக்கமாக நடந்து சென்றன. சிறிது நேரத்திற் கெல்லாம் அவ்வுருவங்கள் ஊரின் புறத்தே மரங்களடர்ந்ததொரு காடு போன்ற

இடத்தில் கட்டியிருந்த மாளிகை ஒன்றில் நுழைந்தன. அங்கு அவ்வுருவங்கள் ஒரு கிழவியால் வழி காட்டப் பெற்று, இரண்டும் உள்ளே கொஞ்ச தூரம் நடந்து சென்று அறை யொன்றில் அமர்ந்தன.

உருவங்கள் அறைக்குள் அமர்ந்த சிறிது நேரத் திற்கெல்லாம் ஏழடி உயரமும், அதற்குத் தகுந்த பரமனும், நீண்டுபர்ந்த நெற்றியும், பருத்து மிரண்ட தன்மையோடு கூடிய கண்களும், கிளி மூக்குப்போல் வளைந்த மூக்கும், வாயை மூடிக்கொண் டிருப்பினும் வெளியே தோற்றும் பற்களும் உடைய கருத்த மனிதன் ஒருவன் அவ்வறைக்குள் நுழைந்து, அங்கு உட்கார்ந்திருந்த உருவங்களின் முன் அமர்ந்தான். அவன் மேலிருந்த புலால் நாற்றம், அங்கு உட்கார்ந்திருந்த உருவங்களின் மூக்கைத் துளைத்தது. அவ்வளவு கொடு நாற்றங்கொண்ட அவன் பேசத் தொடங்கி "நீங்கள் எங்கிருந்து வந்தவர்கள்? உங்களுக்கு என்னிடம் என்ன வேலை" என்று கேட்டான். அந்தச் சமயம் உருவங்கள் இரண்டும் ஒன்றை யொன்று சந்தித்துப் பேசிக் கொண்டனபோல் தோன்றிப் பின் அவைகள் தம் மேலிருந்த கருப்புத் துணிகளைக் களைந்தன. துணிகள் நீக்கப்பட்டதும், முன்னிருந்தவன் அங்கு தோன்றிய உருவங்களைக் கண்டு சிரித்தான். அவ்வுருவங்கள் யாவை என நீங்கள் எண்ணுகிறீர்கள். அவைகள்தாம் தனமணியும், அவளுடைய தோழியும்,

தனமணி எதிரிலிருந்தவனைப் பார்த்து "நீர் வயித்

தியும் செய்வதில் சமர்த்தர் என்று யான் உணர்ந்தேன். ஆதலால் உம்மிடம் யான் ஒரு உதவியை நாடி வந்தேன்" என்றாள். பெண் என்றால் பேயும் கூத்தாடும் என்றவாறு அந்தக் கடுங்குணமும், கோர உருவமுமுடைய மந்திரக்காரன் அந்த மொழிகளைக் கேட்டுச் சம்மதித்தவன் போலத் தலையை யசைத்து "உனக்கு என்னால் வேண்டிய உதவியைத் தெரிவித்தால் அதனை உடனே நான் செய்வேன்" என்றான். அப்போது அவள் "வயித்தியரே! எனக்குச் சிறிது மருந்து வேண்டும். அதைச் சாப்பிட்டவர் உடனே இறக்கும் தன்மையானதாக இருக்கவேண்டும்" என்று சொன்னாள். அவ்வாறே மந்திரவாதியும் அவளுக்குத் தின்பண்டம் போன்ற மருந்து ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்தான். அதைத் தனமணி பெற்றுக்கொண்டு தோழியை நோக்க, அவள் துணியில் மறைத்து வைத்திருந்த பணப்பையை எடுத்து மந்திரக்காரனிடம் கொடுத்தாள். அவன் அந்தப் பணத்தைப் பெற்றுக் கொண்டு அவர்களை ஒருமுறை உற்றுப் பார்த்துவிட்டு வெளியே அனுப்பி விட்டான். இருவரும் முன் போல் போர்வையை அணியாமல் சிறிது நேரம் நடக்கலானார்கள்.

முன்னொரு நாள் தனமணியால் அவமதிப்புற்றுச் சென்ற இராஜவர்மன் அவளை எவ்வகையிலேனும் அடைய வேண்டும் என்று கருதி, தன் தோழர்களுடன் ஆலோசித்து, அவளைக் கவர்ந்து செல்வதற்காக அவ

னும், மந்தவர்மனும், மற்றும் பல வேலைக்காரர்களு மாக ஊரினின்றும் புறப்பட்டு வந்து, சங்கமபுரிக்குச் சிறிது தூரத்தில் தங்கி யிருந்தார்கள். அந்த இரவே தனமணியும் மந்திரவாதியினிடம் சென்று மீண்ட இரவு. ஆதலால், இராஜவர்வன் தங்கியிருந்த வழி யாகவே தனமணியும் அவளுடைய தோழியுடன் மேற் போர்வை யின்றிக் குதூகலத்துடன் நடந்து கொண் டிருந்தாள்.

இராஜவர்மன் அவளைக் கண்டுவிட்டான். உடனே அவன் தன் துணைவர்களுக்கு அவளைக் காட்டி, அவளே அரசன்மகள் என்றும், அவள் தான் தன்னை அவமதித்தவ ளென்றும் கூறினன். பின் எல்லோரும் எழுந்து மெதுவாகச் சென்று, அவ்விருவரையும்சேர் த்துக் கட்டித் தூக்கிக் கொண்டார்கள். அன்றிவே அவர்கள் மாளவத்தை யடைந்து, அப்பெண்களை அரண்மனையில் ஒரு அறையில் பிணிகளை அவிழ்த்து விட்டனர். இராஜவர்மனும், மந்தவர்மனும தவிர மற்றவர்கள் வெளியில் நின்றிருந்தார்கள்.

இராஜவர்மன் தனமணியைப் பார்த்து 'மாதே! நீ என்னை அன்று அவமதித்தாய் அல்லவா?' இன்று என்ன செய்யப் போகிறுய்? அற்பப் பெண்ணுகிய நீ ஆடவனை ஏமாற்றிவிட முடியுமோ! பேதாய் இப்போது என்ன சொல்லுகிறுய், என்னை மணம் புரிகிறுயா, அல் லது என் வாளுக்கு இரையாகின்றுயா?" என்று அவன் கையிலிருந்த வாளைக் காட்டிப் பயமுறுத்தினன்.

அஞ்சாமல் தனிவழியே சென்ற குற்றத்தால் இடர்ப்பட்ட அப்பெண் ஒன்றுந் தோன்ருது திகைத்து, இவர்கள் கைகளினின்று யான் எப்படித் தப்ப முடியும் என்று நெடு நேரம் யோசித்தாள். பிறகு அவள் தன்னுக்குள்ளேயே ஒரு சூழ்ச்சியைக் கண்டு பிடித்து, நாம் இவர்களைக் கொண்டே நம் காரியத்தை முடித்துக் கொள்ளவேண்டும். இதுவும் கடவுள் நமக்குக் காட்டிய நல்ல வழிதான் என்று தேறி, இராஜவர்மனைப் பார்த்துச் சிரித்து, "அரசரே? யான் உம்மை மணமுடிக்க வேண்டுமானுல் நீர் எனக்கு ஒரு காரியத்தை நிறைவேற்றித் தரவேண்டும். அது என்னவெனில் எம் ஊரில் வலைஞன் ஒருவன் இருக்கின்கிருன். அவன் வெகு பணக்காரன் அவனை யான் கொடுக்கும் மருந்தால் கொல்வதே யாகும்" என்று கூறினுள். இராஜவர்மன் அவள் மொழிகளைக் கேட்டு அவ்வாறே செய்வதாக அவளிடம் கூறி, மந்தவர்மனுடன் வெளியே சென்று குதிரையேறி, அந்த விநாடியிலேயே சங்கமபுரியை நோக்கிச் சென்ருன். காவலர் தனமணியைக் காத்து நின்ருர்கள்.

சங்கமபுரியில் அரண்மனையில் தனமணியைக் காணுமல் யாவரும் அங்கு மிங்குந் தேடிக்கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் அரசகுமாரர்களிருவரும் வலைஞன் வீட்டைத் தேடிக்கொண்டு தனமணி குறிப்பிட்டபடிச் செல்ல, அங்கு சிலர் வாயிலில் காவல் புரிவதைக் கண்டார்கள். அவர்கள் அரச குமாரர்

களைத் தடுத்து, உட்புகாவாறு நிற்க, அங்கு இருதிறத் தாருக்கும் சண்டை நிகழ்ந்தது. அச்சமயம் உள்ளிருந்த வலைஞனை சிங்கக்குட்டி என்பவன் வெளியே வந்து பார்க்க, வாயிலில் போர் நிகழ்வதைக் கண்டு அவர்களைக் கையமர்த்திப் போரை நிறுத்தினான்.

இராஜவர்மனும், மந்தவர்மனும் அங்கு நின்றவனைக் கண்டதும், சிறிது நேரம் விழித்துப் பிறகு தம்பீ என்று இருவரும் அவனைக் கட்டித் தழுவிக் கொண்டார்கள். சிங்கக்குட்டியான இளைஞன் அத்தருணம் அவர்களிடம் பகைமை பாராட்டவில்லை. உத்தம குணமுடையவர்களும், ஒழுக்கத்தைக் கொண்டவர்களும் குற்றவாளிகளை மன்னித்து அவர்களுக்கு அறிவு வரச் செய்வது அவர்களுடைய முதன்மையான நோக்கம் அல்லவா. ஆதலால் இளைஞன் சகோதரர்களை உள்ளழைத்துச் சென்று அமர்த்தினான். அவர்கள் நன்றாகக் களைத்திருந்ததனால் அப்போதே பழங்களும், பாலும் கொணர்வித்து அவர்களை உண்பிக்கலானான்.

அரச குமாரர்கள் தேடி வந்த காரியத்திற்கு அது தகுந்த நேரம் எனக் கருதினார்கள். அவர்கள் பழங்களை உண்ணும் போது, இளைஞனையும் உண்ணும் படிக் கூறி, அவனுக்குத் தாமே சில பழங்களை உரித்து வாயிலூட்டினர். அவ்வாறூட்டிய பழங்களில் அவர் கைக்கொண்டு வந்த மருந்தை நுழைத்து, அவன் வாயினுட் செலுத்தினர்கள்.

கட்டி யெருவிட்டுச் செழுந்தேனை வாக்கினும்
காஞ்சிரங் கைப்புவிடுமோ
கழுதையைக் கட்டிவைத்து ஓமம் வளர்க்கினும்
அது பெருங் குதிரையாமோ
குட்டியர வுக்கு அமு தளித்தே வளர்க்கினும்
கொடுவிட மலாதுதருமோ
குக்கல்நெடு வாலுக்கு மட்டையைக் கட்டினும்
கோணுமலே நிமிருமோ

* * * *

* * *

உலவுகன கற்பூர வாடைபல கூட்டினும்
உள்ளியின் குணமாறுமோ
மட்டிகட் காயிரம் புத்திசொன்னாலு மதின்
மார்க்க மரியாதை வருமோ

—தருமாதசாசர்

என்றவாறு தீயர்களுக்கு எத்துணை நல்லுபதேசம் செய்யினும், நல்மார்க்கங்களை நடத்திக் காட்டினும், அவர்களுடைய தீயதன்மையினின்றும் அவர்கள் மாறுபட மாட்டார்கள். அல்லவா? அத்தகைய பேய்க்குணம் படைத்த நன்றி கெட்ட மடயர்களாகிய அந்த இராஜவர்மனும், மந்தவர்மனும் தீமைபுரிந்த தம்மைக் கண்டவுடன் காப்பாற்றி, முகமன் கூறியதையுங் கருத்துட் கொள்ளாது, உடனே விடமூட்ட, இளைஞன் மந்திரக்காரனின் தந்திரத்தாலும், கடவுளருளாலும் அப்போதே சாகாமல், ஆனால் பயித்தியங் கொண்டவனாயினான்.

இளைஞன் செயல் கண்ட இருவரும் கிழ வலைஞன்

சமீபத்தி லில்லாததனுல், அவனை உடனழைத்துக் கொண்டு உலாவச் செல்லுபவர்கள் போல் காவலர் களுக்குப் பாசாங்கு காட்டி, அவனைத் தம் குதிரைமே லேற்றிக் கொண்டு மாளவம் புகுந்து, அரண்மனையை அடைந்து, தனமணியின் முன் அவனை விட்டனர். வலைஞனைக் கண்ணுற்றதும் தனமணி தன் எண்ணம் முடிந்துவிட்டது, என்று கருதி, அரச குமாரர்களைப் பார்த்து, உடனே இளைஞனைக் கொன்று விடுங்கள் என்று கூறினுள்.

இளைஞன் பயித்தியத்தினுல் சிரிப்பதும், விளை யாடுவது மாக இருந்தான். அந்தச் சமயம் இராஜ வர்மன் வெகு சந்தோஷத்துடன் மதுபானம் செய் திருந்து குடியேறியதனுல், அவளைப் பார்த்து "அர சியே! உன் நிமித்தம் இந்த இளைஞனைக் கொல்லச் சொல்லுகிருயல்லவா? அவன் இப்போது பயித்தியம் பிடித்தவன் ஆனுனே. அவனுல் இனி உனக்கென்ன துன்பம் நேரும்? தவிரவும், ஒரு பெண்ணின் நிமித்தம் நாங்கள் இவனை எத்தனைமுறை கொல்ல முயன்ருேம். அந்தச் சமயங்களில் இவன் இறந்தவனுகவே தோன் றித் தப்பித்துக்கொண் டிருக்கின்ருனே! மற்றுங்கேள். உன்னிமித்தம் எம்முடைய இளைய சகோதரனுகிய இவ னைக் கொல்லச் சொல்லுகிருயே" என்று குடிவெறியில் உண்மையை உரைக்கத் தொடங்கி விட்டான்.

பல நாளைய திருடன் ஒருநாளில் அகப்பட்டுக் கோள்வான் என்பதும், மது வருந்துவோன் தான்

செய்த குற்றங்களையும், உண்மைகளையும் வெறியினால் வெளிப்படுத்துவான் என்பதும் அங்கு தெளிவாயிற்று. என் சகோதரன் என்ற மொழிகள் இராஜவர்மன் வாயினின்றும் வந்ததைக் கேட்ட தனமணி திடுக்கிட்டு அவள் கொண்டிருந்த வஞ்சம் அவ்வளவையும் அக்கணமே மறந்தாள். வலைஞன் என்று அவனுக்குத் துன்பம் ஊட்ட நினைத்தவைகளை நினைத்து அவள் மனம் வருந்தினாள்.

தனமணி எழுந்து சென்று, பயித்தியத்துடன் கிடந்த அந்த இளைஞனைத் தன் கைகளால் சேர்த்துப் பிடித்துக் கொண்டாள். அஃதுணர்ந்த துஷ்டர்களாகிய இராஜவர்மனும், மந்தவர்மனும், அவளைப் பயித்தியக் காரனிடத்தினின்றும் இழுத்து அப்புறம் தள்ளி விட்டு, அவனை வெட்டுவதற்காக வாளை இருவரும் மேலே ஓங்கினர். அதே சமயத்தில் அவர்களிருவரும் கை சோர்ந்து தரையோடு தரையாய் அழுந்தத் தொடங்கினர். ஏனெனில் கிழவலைஞன் தன் மகனை வீட்டில் காணாமல் தேடிக் காவலர்களைக் கேட்டு, அவர்களால் நடந்த விஷயமுணர்ந்து, இன்னது செய்வதெனத் தெரியாமல் திகைத்துக்கொண்டிருந்தான்.

யோகாநந்தரிடம் இருந்த மாது குணமணி என்பவள் அத்தருணம் இளைஞன் செயலுணர்ந்து உடனே கிழவலைஞனிடம் ஆகாய மார்க்கமாக வந்து விஷயத்தைக் கூறினாள். பின்னர் அவள் கிழ வலைஞனை மாளவம் கொண்டு சேர்த்தாள். அத்தருணமே அரசகுமா

ரர்கள் இளைஞனைக் கொல்ல முயன்றார்கள். ஆதலால் குணமணி அவர்களைப் பயமுறுத்த, அவர்கள் பூமி யோடு தாழ்ந்து முடிவில் செயலற்று விழுந்து விட்டார் கள். பின்னர் இளைஞனுடைய பயித்திய முணர்ந்த குணமணி தன் குருவின் சக்தியினால் அவன் பயித்தி யத்தைப் போக்கினாள்.

பயித்தியம் நீங்கியதும் சிங்கக் குட்டி என்று பெயர் வகித்திருந்த ஞானவர்மன் கிழவலைஞனையும், தனமணி,குணமணி,முதலானவர்களையும், தன் சொந்த அரண்மனையையும் கண்டு, விஷயங் கேட்டுணர்ந்து கொண்டான். உடனே குணமணியின் துணைவலியால் யாவரும் அன்றிரவே சங்கமபுரியை அடைந்து அரண் மனையைக் குறுகினார்கள். மகளைக் காணப் பெறவில்லை என்று கலங்கிநின்ற மன்னன் மகளைக் கண்டதும் அள விலா மகிழ் வெய்தினான்.

தனமணி தான் செய்த காரியங்களையும், தனக்கு நேர்ந்த விபத்தையும் அவற்றின் முடிவையும் விளங்கத் தன் தந்தையிடம் கூறினாள். மற்றும் வலைஞனான இளை ஞன் உண்மைவலைஞன் அல்லவெனவும், அவன் மாளவ தேசத்து அரசனுடைய இளையமகன் ஞானவர்மன் என்பதையும் கூறி, அவனையே தான் மணக்கக் கருது வதாகவும் கூறினாள். அரசன் யாவு முணர்ந்து எல் லாம் கடவுள் செயலே என்று மகிழ்ந்து, அவ்வாறே மணம் முடிப்பதாகவும் தீர்மானஞ் செய்து, அன்று முதல் ஞானவர்மனை அரண்மனையில் வசித்து வரச்

செய்தான். கிழவலேஞன் தனக்கு மகஞக விருந்தவன் அரச குமாரன் எனக் கண்டு, ஒருபுறம் சந்தோஷமும், ஒருபுறம் அச்சமுமுடையவ ஞனன். அஃது ணர்ந்த ஞானவர்மன் அவனைத் தேற்றி, அவனுக்குப் பல நன்மொழிகள் கூறி அனுப்பினுன்.

குணமணி யாவுங் கண்டு அரசனைப் பார்த்து, அரசரே! 'யான் ஒரு அனுதை. என்னைக் காப்பாற்றிய வரும் இவரேயாவர். இவரை அன்று முதல் என் உடல் பொருளாவிக் குரியர் எனக் கூறியுளேன். இது விஷ யமும் தாம் அறிந்து செய்வன செயல் வேண்டும்" என்று கூறி, மறுநாள் தான் வருவதாக ஆகாயமார்க்க மாகப் புறப்பட்டுச் சென்ருள்.

கிழவலேஞன் தன்னுடைய வீட்டுக்குச் சென்ருன். அச்செயல்களைக் கண்ட அமரபுஜங்கன் யாவும் விங் தையினும் விங்தையாக விருக்கின்றனவே யென்று களிப்பெய்தி நின்ருன்.

## 12-ஆம் அத்தியாயம்

### முடிபு

அமரபுஜங்கன் அரண்மனையில் வெகு ஆடம்பரமாக அலங்காரங்கள் நடைபெற்று வந்தன. ஊரெங்கும் அலங்காரத்திலேயே மூழ்கி யிருந்தது. அரசன் மனையில் ஒரு பெரிய கூடத்தில் அமர்ந்திருந்தான். தனமணியும், ஞானவர்மனும் அரசன் பக்கத்தில் அமர்ந்திருந்தார்கள். அத்தருணத்தில் குணமணி திடீரென்று அங்குத் தோன்றிநின்றாள். அவள் பக்கத்தில் முனிவர் ஒருவரும், அவர் தோளில் தூங்குந் தன்மையுடைய உடலொன்றும் இருப்பதாக அங்கிருந்தவர்கள் உணர்ந்தார்கள். குணமணி முனிவரை நோக்க, அவர் தன் தோளிலிருந்த உடலை அங்கு விரித்திருந்த ஒரு பெருங் கம்பளத்தில் கிடத்தினார். அவ்வுடலை எல்லோரும் உற்றுப் பார்த்தார்கள். ஞானவர்மன் அதனை நன்கு நோக்கி, அது தன்னுடைய தந்தையின் உடல் என்று நன்றாய்த் தெரிந்து கொண்டான். அந்தச் சமயம் முனிவர் அவ்வுடலைக் கையால் தடவிக் கொடுக்க, அது சுவாசித்துக்கொண்டு, சிறிது நேரத்திற்குள் கண்விழித்து, எழுந்து உட்கார்ந்தது.

ஞானவர்மன் கண்விழித்த தன் தந்தையின் முன் சென்று விழுந்து பணிந்தான். திடீரென்று மன்னன் விழிப்புற்றதால், ஒன்றுந் தோன்றப்பெறாது திகைத்து சுற்றிப் பார்த்துத் தானிருக்கும் இடம் வேறாக இருப்பதையும், தன்னைச் சூழ்ந்தவர்களில் ஞானவர்மன் தவிர

மற்றவர்கள் அயலார்களாக இருக்கவுங் கண்டு 'நான் இங்கு எப்படி வந்தேன்; நேற்றிரவு நான் தூங்கிய படுக்கை எங்கே? இங்குளல்லாம் புதியவாக இருக்கின்றனவனே' என்று ஞானவர்மனைப் பார்த்துக் கேட்டான். அது கேட்ட ஞானவர்மன் ஒன்றுங் கூறமுடியாமலிருந்தான்.

குணமணி அவரைப் பார்த்து "மாளவநாட்டு 'அரசரே! நீர் தூங்கிய நாள் நேற்று அல்ல, அது இன்றைக்குச் சற்றேறக்குறைய பல மாதங்களாகின்றன.' என்று கூறி அவள் தன்னை இராஜவர்மனும், மந்தவர்மனும், துன்பப்படுத்திய திலிருந்து அன்று வரையில் நடந்த வரலாறு முழுமையும் சொல்லி முடித்தாள்.

குணமணியால் யாவும் கேட்டு அங்கிருந்தவர்கள் ஆச்சரியம் எய்தினார்கள். அத்தருணத்தில் ஞானவர்மனுக்குத் துணையான வலைஞன் இரண்டு மனிதர்களுடன் அங்குத் தோன்றினன். ஞானவர்மன் அந்த மனிதர்களை அரசனுக்குக் காட்டினன். அவர்கள் இராஜவர்மனும், மந்தவர்மனும் என்பதை உணர்ந்து அரசன் சீற்றங்கொள்ள, அவர்கள் அது கண்டதும் நடுநடுங்கி அவன் பாதங்களில் விழுந்து அழுது மன்னிப்பு வேண்டினார்கள். சிறியோர் பெரும்பிழை செய்தனராயின் பெரியோர் அப்பிழை பொறுத்தலு மறிதே என்றவாறு அவ்வரசனை தேவவர்மன் அவர்களைத் தண்டிக்குமாறு, ஞானவர்மனுக்கே கட்டளை

யிட்டு, உண்மை மகனுன ஞானவர்மனுக்கே அரசை யும் கொடுப்பதாக யாவர்க்கும் கூறினுன்.

மறுநாள் ஞானவர்மனுக்கும், தனமணிக்கும் மணம் நடத்த அரசர்கள் இருவரும் பேசிக்கொண் டார்கள். அச்சமயம் குணமணியைப் பற்றியும் அமர புஜங்கன் தேவவர்மனிடம் கூற, இரண்டு பெண்களை யுமே ஞானவர்மன் மணமாலை சூட்டவேண்டும் என அவர்கள் நிச்சயித்தனர். அவ்வாறே மறுநாள் பல வாத்தியங்களுடன் மணம் இனிது நிறைவேறியது.

தேவவர்மன் அன்றே ஞானவர்மனுக்கு மகுடாபி ஷேகமும் செய்வித்தான். அன்று முதல் மாளவத் திற்கும், சங்கமபுரிக்கும் ஞானவர்மன் அரசுகி விளங் கிச் சங்கமபுரியையே தலை நகராகக்கொண்டு வாழ்ந்து வர எண்ணினுன்.

தேவவர்மனும், அமரபுஜங்கனும் அரசபாரம் தம்மைவிட்டு ஒழியப் பெற்றவர்களாதலால், அவர்கள் முனிவரிடமேகி, தவமேற்கொண்டு வாழ்ந்து வந்தார் கள்.

இராஜவர்மனும், மந்தவர்மனும் தாம் கொண்ட துர்மார்க்கச் செயல்களுக்காக வருந்தி நாளடைவில் உடல் மெலிந்து உயிர் விட்டார்கள்.

மெய்யதைச் சொல்வராகில் விளங்கிடும்
மேலும் நன்மை
வையக மதனிற் கொள்வார் மனிதரில்
தேவ ராவர்

பொய்யதைச சொல்வாராகில் போஜன
மற்ப யாகும்
நொய்யவ ரிவர்கள் என்று
நோக்கிடார் அறிவுள் ளோரே

—விவேகசிந்தாமணி

என்றவாறு உண்மையையே கடைப்பிடித்து வந்த ஞானவர்மன் பல துன்பங்களில் பட்டும் முடிவில் அரசனுகியாவராலும் மகிழப் பெற்று விளங்கினுன். சின்னுள் சந்தோஷத்தோடு வாழ்ந்தார்களேனும் பொய்யும், களவும், சூதும், கொலையும் நிரம்பப்பெற்ற அரசகுமாரர்களிருவரும் தம்மைத்தாமே முடிவில் கொலைபுரிந்தார்கள். ஆதலால் மாணவர்களே! நீவிர் என்றும் உண்மையைக் கடைப்பிடித்து ,தீமைகளை யொழித்து வாழ்வீர்களானுல், உமக்கு இடை யிடையில் எத்துணைத் துப்பம் அவை களினின்றும் நீவிர் தப்பித்துக் கொள்ளக் கடவுள் உமக்குத்துணை புரிவார்.

'உண்மையின் மிக்க நன்னெறி யில்லை
ஒழுக்க முடைத்தே உயர்குல மாகும்
வஞ்சக முடையார் எஞ்சா தழிவர்

என்பது என்றும் நிலையுடையவாக்கியங்கள் ஞானவர்மன் தன்னிரு மனைவியருடன் சுகமாக இருந்து குடிகளுக்கு யாதொரு தீமையும் நேராவாறு ஆட்சி புரிந்து நீடூழி காலம் வாழ்ந்திருந்தான்.

முற்றிற்று.